



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர்
# முத்துவிழா மலர்



## தேவகோட்டை.

யுவ மார்கழி 3உ.  18--12--1995

உ
சிவமயம்

ஞாலம் நின்புகழே ஆகவேண்டும் தென்
ஆலவாயில் உறை எம் ஆதியே

தேவகோட்டை

# சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர்
# சகஸ்ர சந்திர தெரிசன சதாபிஷேக
# முத்துவிழா மலர்

பதிப்பாசிரியர் :
ஈசான தேவ நாம
டாக்டர். ந. மாணிக்கம் M.A.






1995 டிசம்பர்

Statement about Ownership and Other Particulars about Newspaper

FORM IV

(See Rule 8)

| | | | |
|---|---|---|---|
| 1, | Place of publication | .... | Trichy |
| 2. | Periodicity of its publication | .... | Nil |
| 3. | Printer's Name | .... | Mr. S. Balasubramanian |
| | Nationality | .... | Indian |
| | Address | .... | KARIKALAN ACHAGAM<br>70, Valayalkara Street, Big Bazaar,<br>Trichy - 620 008. |
| 4. | Publisher's & Editor's Name | .... | Prop. Dr. N. Manickam |
| | Nationality | .... | Indian |
| | Address | .... | 16-A, Samy Asari Lane,<br>Chinnakadai Street,<br>Madurai - 625 001. |
| 5. | Name and address of individuals, who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital. | } | Sivasri Tatpurusha Desikar<br>Muthuvizha Kuzhu<br>47, Agraharam, Varaganeri,<br>Trichy - 620 008. |

I, Prop. Dr. N. Manickam hereby declare that the particulars given above are true to the best of my knowledge.

Date : 15-12-1995

N. MANICKAM
Signature of Publisher

Karikalan Achagam, Trichy - 620 008. Phone : 88110

63-5

உ

சிவமயம்

# பதிப்புரை

தேவகோட்டைச் சைவசித்தாந்த சரபம், சைவசித்தாந்த ஞாயிறு, சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் என்னும் பாலகவி வயிநாகரம் வே. இராமநாதன் செட்டியார் அவர்களின் 81-ஆம் ஆண்டு நிறைவு சகஸ்ர சந்திரதரிசன சதாபிஷேக முத்துவிழா நாளில் (யுவ, மார்கழி 3உ சுவாதி நாள் 18—12—95 திங்கட்கிழமை) இச்சிறப்புமலர் சைவமும் தமிழும் கமழ வெளிவருகின்றது.

தாமும் அருள்வழியில் நின்று தம் அடியவர்களையும் அவ்வருள் வழியில் நிறுத்தும் சிவஞானச் செல்வராகிய ஆயிரம் பிறைகண்ட முத்துவிழா நாயகர் அவர்கள் சைவப்பணியில் தளராது தம்மை ஈடுபடுத்திக் கொண்டுள்ளவர்கள் அநுபவ உண்மைகளோடு மனதிற்பதியும் வண்ணம் அரிய சாத்திரக்கருத்துக் களையும் எளிமைப் படுத்தி உரையாற்றும் திறமும், எழுத்தாற்றலும், சிவதீட்சை வழங்கி அருளும் நலமும் உடையவர்களாகத் திகழ்ந்து வருகின்றார்கள். அவர்களின் வரலாறு சைவத்தமிழ் வரலாறாக விளங்கும் சிறப்புடையது. அதனை நுட்பமாகவும், விரிவாகவும் போற்றியுரைத்து மகிழும் பேறு இம்மலரில் நமக்கு வாய்த்துள்ளது. அரிய கட்டுரைகளும், மறவாது நினைவு கொள்ள வேண்டிய செய்திகளும், கவிமலர்களும் இம்மலரில் பொன்னே போல் போற்றிக்கொள்ளப் பெற்றுள்ளன. குருமுதல்வர் அவர்கள் பால தீட்சை பெற்று அருட்செல்வர் களாக விளங்கும் சீடர்களின் நிழற்படங்கள் இயன்றவரை இடம்பெற்றுள்ளன, மலருக்கு இவை உறவாலும் உணர்வாலும் அணி சேர்த்து நிற்கின்றன.

வாழ்த்தி அருளியுள்ள சைவ ஆதீனங்களின் குருமகா சந்நிதானங்களுக்கும் சான்றோர்களுக்கும், கட்டுரைகள், கவிதைகள் அளித்த பெருமக்களுக்கும், திட்டமிட்டுப்பணிகளை நன்முறையில் செய்துவரும் முத்துவிழா குழுவினர்க்கும் மலர்க்குழுவினர்க்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். மலர்ப் பொறுப்பை விரைவாகவும், திறமையோடும் நிறைவேற்றுவதில் செயலர், 'சிவநெறித்தொண்டர்' ஆர். சரவணபவானந்தன் பி.காம்., அவர்களின் பணி அளப்பரியது; அவர்கட்கு என் நன்றி உரியது. விளம்பரம் அளித்து உதவிய வணிகப் பெருமக்கள் யாவருக்கும் நன்றி.

இவ்வினிய செயலுக்கு முதன்மை பொருளாக வீற்றிருந்து அருளும் ''சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர்'' அவர்களின் பொன்னார் திருவடிகளை வாழ்த்தி வணங்கி மகிழ்வோமாக.

தேவக்கோட்டை.
18—12—1995

டாக்டர். ந. மாணிக்கம்
பதிப்பாசிரியர்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# முத்துவிழாக்குழு

| | | |
|---|---|---|
| தலைவர் | : | சிவத்திரு. A. இராஜாஜி, வெள்ளக்கோயில் |
| இணைத்தலைவர் | : | கு. கரு வெ. இராமநாதன் செட்டியார் தேவகோட்டை |
| துணைத்தலைவர்கள் | : | சிவத்திரு. தைலா கோபால் சுவாமி, திருச்சி |
| | | சிவத்திரு லெ. நாராயணன் செட்டியார் மதுரை |
| | | சைவத்திரு. ந. மணிமொழியன் M.A. மதுரை |
| | | சிவத்திருமதி. டாக்டர் இராஜம் சேதுராமன் |
| ஆலோசனைத் தலைவர்கள் | : | சிவத்திரு. நா. சா. இராமநாதன், மதுரை |
| | | சிவத்திரு இ. கருப்பசாமி மூப்பனுர், மதுரை |
| | | ,, மு. இராமலிங்கம், பெருந்துறை |
| | | ,, V. M. நடராஜன், பெருந்துறை |
| | | ,, கு. வேலன், பெருந்துறை |
| | | ,, டாக்டர் பிச்சை குருக்கள், பிள்ளையார்ப்பட்டி |
| | | ,, நல்லி சுப்ரமணியன் செட்டியார், காஞ்சீபுரம் |
| செயலாளர் | : | சிவத்திரு. R. சரவணபவானந்தன் B. Com. திருச்சி |
| இணைச் செயலாளர்கள் | : | ,, K. சக்திவேல், திருச்சி |
| | | ,, A. S. ராதாகிருஷ்ணன், மதுரை |
| துணைச் செயலாளர்கள் | : | ,, N. சம்பத், மதுரை |
| | : | ,, S. ரெகுநாதன், வெள்ளலூர் |

# முத்துவிழா மலர்க்குழு

| | | |
|---|---|---|
| தலைவர் | : | சிவத்திரு. சுப. அண்ணுமலை, மதுரை |
| துணைத்தலைவர் | : | ,, ந. மாணிக்கம், மதுரை |
| உறுப்பினர்கள் | : | ,, க. சேது இராமலிங்கன் இராமேசுவரம் |
| | | ,, புலவர் சி. கல்யாணசுந்தரம், மதுரை |
| | | ,, பா. சுந்தர் M.A. திருச்சி |
| | | ,, சொ. அ. மணிவாசகம், பொத்தனூர் |
| | | சைவத்திரு. இராகவன் முத்து, மதுரை |

# உள்ளுறை

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

ஆல நிழலமர்ந்த அண்ணல் அதிட்டிக்க
மூலநோய் தீர்க்கும் முதுமறையைச் — சீலமுடன்
சார்ந்தோர்க் கருளுகின்ற தத்புருஷ தேசிகர்தாள்
சேர்ந்தோம் அடைந்தோம் சிவம்.

—தி. சோமசுந்தரம்

சிவஸ்ரீ தத்புருஷ பாத சேவிதம்
சதாசிவ பக்த தத்வார்த்த க்ரஹிதம்
பாப ஜனன விநாச காரணம்
நமாமி தத்புருஷ பாத பங்கஜம்

— து. க. கந்தசாமி



நமது குருநாதர் ஐயா அவர்களும் — ஆச்சி அவர்களும்



சிவஸ்ரீ ஈசான தேசிக நாம

**இராம. சொக்கலிங்கம்**

தேவகோட்டை



நமது குருநாதர் ஐயா அவர்களின் மகன் - மருமகள்
இராம. சொக்கலிங்கம் — சொ. விசாலாக்ஷி



நமது குருநாதர் ஐயா அவர்களின்
மகன் வழிப்பேத்தி குடும்பம்
சோமசுந்தரம் - மீனுட்சி - ஹேமலதா



நமது குருநாதர் ஐயா அவர்களின்
மகன் வழிப்பேரன்.
செல்வன். சொ. சோமசுந்தர ராமனாதன், MBM.



நமது குருநாதர் ஐயா அவர்களின்
மகள் - மாப்பிள்ளை
அழகப்பன் — மீனாட்சி



நமது குருநாதர் ஐயா அவர்களின் மகள்வழிப்பேரன்
குடும்பம்
அழ, சித்சபேசன் — சீதாலக்ஷ்மி — விஜய்



நமது குருநாதர் ஐயா அவர்களின் மகள் வழிப்பேத்தி குடும்பம்
காசிநாதன் - ஞானப்பூங்கோதை - சரவணபவா - கார்த்திக்



நமது குருநாதர் ஐயா அவர்களின் மகள் வழிப்பேத்தி குடும்பம்
மீனாட்சிசுந்தரம் - சிவகாமி - கார்த்திக்



நம் குருநாதர் ஐயா அவர்களின் மகள் வழிப்பேரன்

அழ. இராமநாதன்



சிவத்திரு. A. இராஜாஜி
வெள்ளக்கோயில்
முத்துவிழாக் குழுத்தலைவர்

உ

சிவமயம்



கு. கரு. வெ இராமநாதன் செட்டியார்

விழாக்குழு இணைத்தலைவர்

தேவகோட்டை



'சிவநெறிச்செல்வி'

டாக்டர். ராஜம் சேதுராமன் மதுரை

கழக துணைத்தலைவர்

&

விழாக்குழுத் துணைத்தலைவர்



சைவத்திரு. ந. மணிமொழியன் M.A.,
விழாக்குழுத் துணைத்தலைவர்
மதுரை.



‘சிவநெறி நம்பி’

**லெ. நாராயணன் செட்டியார்**

அதிபர், ஸ்ரீ விசாலாக்ஷி மில்ஸ், மதுரை

முத்துவிழாக்குழுத் துணைத்தலைவர்



'சிவநெறித்தோன்றல்'

**நா. சா. இராமநாதன்** மதுரை.

கழகத் துணைத்தலைவர், மதுரை கிளைக்கழகத் தலைவர் &

முத்துவிழாக்குழு ஆலோசனைத்தலைவர்



சிவநெறித் தொண்டர்

**இரா. சரவணபவானந்தன் B.Com.,**

கழகச் செயலாளர் & முத்துவிழாக் குழுச் செயலாளர்



N. சம்பத் B.A.,
விழாக்குழுத் துணைச்செயலர்



A. S. ராதாகிருஷ்ணன்
விழாக்குழு இணைச்செயலர்
&
மதுரை கிளைச் செயலர்



S. ரெகுநாதன்
விழாக்குழு இணைச்செயலர்
&
மதுரை கிளை துணைச்செயலர்



K. சக்திவேல்
கழகத் துணைச்செயலர்
&
விழாக்குழு இணைச்செயலர்



பா. சுந்தர் M.A.,
கழக இணைச்செயலர்



'சிவநெறிச்செல்வர்'
இ. கருப்பசாமி மூப்பனர்
விழக்குழு ஆலோசனைத்தலைவர்
&
மதுரை கிளைக்கழகதுணைத்தலைவர்



மு. இராமலிங்கம்
விழாக்குமு ஆலோசனைத்தலைவர்
&
கொங்கு மண்டலக் கிளைத்தலைவர்



'சிவநெறித்தொண்டர்'
கு. வேலன் M.A.,B.Ed.,
விழாக்குழு ஆலோசனைத்தலைவர்
&
கொங்கு மண்டலக் கிளைச்செயலர்



V. M. நடராஜன்
விழாக்குழு ஆலோசனைத்தலைவர்

உ
சிவமயம்

திருக்கயிலாய பரம்பரை சீர் வளர்சீர்

# சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி அவர்கள்

குருமகாசந்நிதானம்

## திருவாவடுதுறை ஆதீனம்

திருவாவடுதுறை - 609 803. (தஞ்சாவூர் மாவட்டம்.)

## "வாழ்த்துரை"

நமது அன்பிற்கும் பாராட்டுதலுக்கும் உரியவர்களாகிய சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்களின் சதாபிஷேக முத்துவிழா அண்மையில் தமிழகச் சைவநெறிக் கழகத்து அன்பர்களால் சிறந்த முறையில் கொண்டாடப்பெறுவது தெரிந்து மகிழ்கிறோம்.

தேசிகரவர்கள் திருமுறைகளிலும் மெய்கண்ட சாத்திரங்களிலும் தமிழ் இலக்கியங்களிலும் ஆழ்ந்த புலமையும், அரிய கருத்துக்களையும் எளிமையாக நயம் தோன்ற எடுத்துரைக்கும் சொல்லாற்றலும் சிறப்பாக வாய்க்கப் பெற்றவர்கள். பல்லாண்டுகளாக, பக்குவமுடைய அன்பர்களுக்குத் தீட்சைகள் வழங்கியும், சிவபூசை எழுந்தருளப் பண்ணியும், நூல்கள் பல இயற்றியும், சிவனடியார் திருக்கூட்டத்தை வளர்த்தும் சிவம் பெருக்கும் செம்மலாகத் திகழ்பவர்கள். சிவபூசைச் செல்வர் தேசிகரவர்களின் முத்துவிழா சிறப்பாக நடைபெறவும், மேலும் நூருவது ஆண்டு விழா முதலிய அணி விழாக்களை அவர்கள் கண்டு களிக்கவும் களிப்பிக்கவும், மலர் அரிய படைப்புகளைத் தாங்கி நல்ல வண்ணம் மலர்ந்து சிவமணம் பரப்பவும் அருள, அருள்தரு ஞானமா நடராசப் பெருமான் திருவடி மலர்களைச் சிந்திக்கின்றோம்,

உ
சிவ சிவ
திருவருள் திரு

# தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக பரமாசாரிய சுவாமிகள்

(ஆதீனகர்த்தர்)

**திருவண்ணாமலை ஆதீனம்,** குன்றக்குடி - 623 206.
பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் மாவட்டம் (தமிழ்நாடு)

☎ குன்றக்குடி - 04577 - 64267
காரைக்குடி - 04565 - 23215

## " வாழ்த்துரை "

சித்தாந்தம் எனப்படுவது ''முடிந்த முடிவு'' எனப்படும். இனிமேல் வினைக்கள் எழாவண்ணம் உச்ச நிலையை அடைந்த நெறி '' சிவநெறி ''.

முன்னைப் பழமைக்கும் பழமையாய்ப் பின்னைப்
புதுமைக்கும் புதுமையாய் உள்ளநெறி சிவநெறி.

சிவம் மிகுந்த சைவசித்தாந்த நெறியை மிக எளிய முறையில் யாவருக்கும் விளங்கும் வண்ணம் கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய் விளக்கும் ''சைவ சித்தாந்த சரபம்'' சிவஸ்ரீ தத்புருஷ தேசிகரவர்கள் சதாபிஷேக முத்துவிழா காண்கிறார்கள்.

நம் ஆதீனக் குருமகாசந்நிதானங்கள் அவர்கள்பால் நெருங்கிய நட்பு கொண்டவர்கள். '' விரிவுரை அரசு '' '' பெரும்புலவர் '' முதலிய சிறப்புக்களை நமது குருமகா சந்நிதானம் அவர்கள், இவர்களுக்கு வழங்கிச் சிறப்புச் செய்துள்ளார்கள். பண்டு பழுத்த இந்தத் தமிழ்ச் சைவப்பழம் பன்னெடுங்காலம் வாழ்ந்து மேன்மைகொள் சைவநீதி உலகெல்லாம் விளங்கச் செய்ய, அண்ணாமலை அண்ணலின் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு,
[ஓ-ம்] பொன்னம்பல அடிகளார்

உ

சிவ சிவ

கயிலைமாமுனிவர்
ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
அதிபர், ஸ்ரீ காசிமடம்.

திருப்பனந்தாள் - 612504
(தஞ்சை மாவட்டம்.)
24—8—95

## " வாழ்த்துரை "

அறனறிந்து மூத்த அறிவுடையாராய் - காலம், சீலம், அறிவாலும் மூத்தவராய்-பலர்க்கும் சமய நெறியில் ஆர்வமூட்டி, சமயப் பணிகளை ஆற்றிடும் வழிகாட்டி, நெறிமுறைகளைச் சுட்டும் 'சைவசித்தாந்த சரபம்' சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்களின் சதாபிஷேக முத்துவிழா 17, 18, 19—12—95 ஆகிய நாட்களில் நிகழவிருப்பது அறிந்து மகிழ்ச்சி.

தாமின்புறுவது உலகின்புறக் கண்டு காமுறும் கற்றறிந்தாராய்ப் பலர்க்கும் பல்லாற்றானும் சமய நெறிகளைப் புலப்படுத்திவரும் அன்பர் பல்லாண்டு நலமுற வாழவும், அன்னவர்தம் முத்துவிழா அமைவுற நிகழவும் செந்திற்கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

சுபம், சிவ சிவ

உ

HIS HOLINESS

**Sri-la-Sri Arunagirinatha Sri Gnanasambanda Desika Paramachariya Swamigal**

**292nd GURUMAHA SANNIDHANAM & AADHEENA KARTHAR**

**MADURAI AADHEENAM**

**70, South Avani Moola Street, MADURAI-625 001. (S. India)**

எல்லாம் வல்ல எம்பெருமானது இன்னருளால்
எல்லா நலங்களும் எய்துக!

நமது ஆதீன வித்வான் ''சித்தாந்தப்புலவர் மாமணி'' சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்களின் முத்துவிழா 18-12-95-ஆம் நாளன்று நடைபெற இருப்பதையும், அவ்விழாவை ஒட்டி நினைவு மலர் ஒன்று வெளியிட இருப்பதையும் அறிந்து மகிழ்கின்றோம்.

சிவஸ்ரீ - தத்புருஷ தேசிகர் அவர்கள் நமது ஆதீன குருமுதல்வரும், சைவசமயத்தின், தமிழ்ச்சமுதாயத்தின் தனிப் பெருந்தலைவருமான திருஞானசம்பந்த சுவாமிகள் மீது மிகுந்த பற்றுதலும், கொண்டவர்கள்.

அவர்கள் இல்லத்தின் பெயர் ''பாலருவாயர்'' நிலையம் என்பது, அவர் வசிக்கின்ற தெருவுக்கு பெயர் ''சம்பந்தர் தெரு'' என்பதும் மிகுந்த பொருத்தமும் மகிழ்ச்சி தரக்கூடிய ஒன்றுகவும் அமைந்துள்ளன

அவருடைய முத்துவிழா மிகச்சிறப்பாக நடந்தேறிடவும் வெளியிடயிருக்கும் மலர், தேசிகர் அவர்களுடைய சிவப்பணிகளை நினைவு கூரத்தக்கதாக அமையவும் திருவருள் பாலிக்குமாறு எமது நிரந்தரத் தாய் தந்தையாகிய சிவபெருமானை பிரார்த்தித்து ஆசீர்வதிக்கின்ருேம்.

எல்லோருக்கும் ஆசீர்வாதம்!!

[ஒ-ம்]
ஸ்ரீஞானசம்பந்த தேசிகர்
16—10—95

தவத்திரு குமரகுருபர சுவாமிகள்
கௌமார மடாலயம்

சின்னவேடம்பட்டி அஞ்சல்,
கோவை - 641 006.
போன் : 866370

# வாழ்த்துச் செய்தி



உயர்திரு சைவ சித்தாந்த சரபம் ''சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர்'' அவர்களின் முத்து விழா நடைபெற உள்ளதை அறிந்து மிக்க மகிழ்ச்சி. முத்து விழா நினைவாக வெளிவரும் நூல் தெய்வமணம் கமலவும், முத்து விழா காணும் ''சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர்'' இறைவன் திருவருளால் நீடு இனிது எல்லா செல்வங்களும் பெற்று வாழ எல்லாம் வல்ல திருமுருகப் பெருமான் திருவடியை வணங்கி வாழ்த்துகின்றோம்.

அன்புடன்,
[ஒ-ம்] குமரகுருபர சுவாமிகள்

உ
சிவமயம்

**ஸ்ரீலஸ்ரீ சிவானந்த சுவாமிகள்**
ஸ்ரீ குட்டைய சுவாமிகள் மடாலயம்
164, தெற்கு வெளி வீதி,
மதுரை - 625 001.

கா. செ. வேதாந்த மடாலயம்,
காளையார் கோவில் - 623 551,
பசும்பொன் தேவர் திருமகன்
மாவட்டம்.

# வாழ்த்துரை.

சைவ சித்தாந்த சரபம் சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்கள் சகஸ்ர சந்திர தெரிசன சதாபிஷேக முத்து விழா மலர் வெளியிடுவது மட்டற்ற மகிழ்ச்சி.

சுமார் 55 ஆண்டுகட்கு முன் திரிசிரபுரம் நூற்றுக்கால் மண்டபத்தில் சைவ சித்தாந்த சபை விழாவில் ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகளது தலைமையில் சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்களது சொற்பொழிவு கேட்டு ஆனந்தமடைந்தேன். கல்லூரிப் படிப்பிலிருந்த நாம் அவர்களது சொற்பொழிவு கேட்டது முதல் சைவ சித்தாந்தத்தில் அழுத்தமான வாய்ப்பு நமக்கு கிடைத்தது சிவபுண்ணியமாகும்.

தனவைசிய நம் குலத்தில் பிறந்த அவர்கள் வீரசைவ நெறியாளர். உலகம் உய்வுபெற வழிகாட்டும் பேரருளாளர். சைவ சித்தாந்த செல்வராக தமிழ் - வடமொழி - சிவாகமம் - விற்பனராக ஆன்மீகப் பணிகளை சீர்பெற வளர்த்து அரும்பெரும் தொண்டுகள் செய்துவருவது பாராட்டுவதற்குரியதாகும். சிவதீட்சை செய்து சிவனடியார் கூட்டத்தை பெருகச் செய்வதும் பெருமைப்படக் கூடியது.

அவர்கள் முத்து விழா காண்பதுபோல நூற்றுண்டு விழாக் கண்டு சைவ சமயத்துக்கும் சிவநெறிக்கும் பற்பல தொண்டுகள் செய்து பல நலன்கள் பெற்று பல்லாண்டு காலம் இனிது வாழ வேண்டி ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேஸ்வரர் திருவடிகளை வணங்கி வாழ்த்துகின்றோம்.

[ஓ-ம்] சிவானந்த சுவாமி

உ

திருச்சிற்றம்பலம்

திருக்கயிலாய பரம்பரை — கொங்கு நாட்டின் குலகுரு

'' ஸ்ரீ மாணிக்கவாசகர் மடாலய மகா சந்நிதானம் ''

'' இறையருட்செம்மல் ''

**ஸ்ரீலஸ்ரீ ச. இராஜலிங்க மாணிக்கவாசக சுவாமிகள்**

**கூனம்பட்டி ஆதீனம்**

பல்லகவுண்டம்பாளையம் [அஞ்சல்] [வழி] விஜயமங்கலம் - 638 056.
தொலை பேசி எண்: 42056 STD : 04234



## '' ஆசியும் வாழ்த்தும் ''

உலக உயிர்கள் இறைவன் திருவடிப் பேறடைய அருளாளர்கள் மார்க்கங்களைக் காட்டிச் சென்றாலும் முத்திப்பேறு தர வல்ல மார்க்கம் சைவ சமய மார்க்கமேயன்றி வேறில்லை. தெளிவும் முடிந்த முடிவுமாகிக் கூறுதல் சைவ சித்தாந்த நெறியே சமயாச்சாரியார்களும், சந்தானாச் சாரியார்களும் அருளிய வழியே சைவ சமய நெறி.

இவ்வுயரிய நிலையில் நின்று மற்றோரையும் அவ்வழிப்படுத்தி சைவ உலகுக்கு அரிய பணியாற்றிடும் ''சைவ சித்தாந்த சரபம்'' சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்கட்கு முத்து விழாவினை சைவ நெறிக்கழகம் நிகழ்த்துவதறிந்து மிக மகிழ்ந்தோம். இவ்வரிய விழாவினை முன்னின்று நிகழ்த்தும் தலைவர் சிவநெறிச் செல்வர் திரு. தைலா கோபால்சாமி அவர்களும், செயலர் சிவநெறித்தொண்டர் திரு R. சரவணபவானந்தன் அவர்களும், மற்றுமுள்ள கழக அன்பர்களும் மிகவும் பாராட்டுக்கு உரியவர்களாவர்.

ஐயா அவர்களின் முத்துவிழா இனிது சிறப்புற நிகழவும், விழாச் செய்வோரும், விழாக்காண்போரும், பன்னலங்களும் பெற்றுத்திகழ நிறைந்து வாழ்த்தி ஆசீர்வதிக்கிறோம். நலம்.

நிறைவுகள்,

[ஒ-ம்] ச. இராஜலிங்க மாணிக்கவாசக சுவாமிகள்

உ
சிவமயம்

தொலை பேசி : 36495
கயிலைமாமுனிவர் வித்துவான்
**சாந்தலிங்க இராமசாமியடிகள்**
**பேரூராதீனம்,**

பேரூர் [அஞ்சல்]
கோயமுத்தூர் - 641 010.
தமிழ்நாடு.

சாந்தலிங்கர் தாண்மலர் வாழ்க.

## தத்புருஷ தேசிகர் முத்துவிழா வாழ்த்துப்பா.

செந்தமிழ் கவிஞர் அன்பால் திருமுறை வாழ்வால் நாளும்
சிந்தனை சிவத்துக்காக்கும் தேசிகராகப் பல்லோர்
வந்தனைக் குரியராக வளரும் தற்புருசர் என்பார்
முந்துமாயிரம் முறைக்கும் மூத்தவர் வாழி! வாழி!

தெய்வ நெறியில் தற்புருட தேசிகர்செய் வழிபாடு
உய்யும் உணர்வுக்குரியவர்க்கு உண்மை உணர்த்தும் உயர்வாகும்
சைவநெறியில் தனை நிறுத்து சான்றோராகித் திருமுறையில்
நையும் மனத்தால் போற்றிசெய்து நலம்பெறவே வாழ்த்துகின்றேம்

வேண்டுந்தங்களன்பு,

அன்புள்ள,
சாந்தலிங்க இராமசாமியடிகள்
[ஒ-ம்.]

உ
சிவமயம்

ஸ்ரீலஸ்ரீ C. நாச்சியப்ப சுவாமிகள்
கோவிலூர் ஆதீனம்

போன் : காரைக்குடி } 22646
கோவிலூர் - 623 319.
மாணகிரி [வழி]
ப. மு. மாவட்டம்

'' தங்கள் குருநாதரின் '' முத்துவிழா மலர் ''
சிறப்புற அமைய ஆசியுரை வழங்குகிறேன்.''

ஷேமம்
ஸ்ரீ சற்குருநாதர் துணை.



உ

சிவமயம்

பாலருவாயர் துணை







அண்ணல் ஆலவாய், நண்ணி னுன்தனை
எண்ணி யேதொழத் திண்ணம் இன்பமே — சம்பந்தர்
திருச்சிற்றம்பலம்

# சகஸ்ர சந்திர தரிசன சதாபிஷேக முத்துவிழா அழைப்பிதழ்

பேரன்புடையீர்,

ஸ்ரீ மீனுட்சி அம்மையார் உடனாய சொக்கலிங்கப்பெருமான் திருவருளால் நிகழும் யுவ வருடம் மார்கழி மீ 3-ம் தேதி (18—12—95) திங்கட்கிழமை சுவாதி நட்சத்திர நன்னுள் காலை 10-30 மணி அளவில் கும்ப லக்ன நல்வேளையில்

---

என் தந்தையார் ''சைவ சித்தாந்த சரபம்''

**சிவஸ்ரீ தத்புருஷ தேசிகரவர்களுக்கு**

என் அன்னையார் திருமதி. **மீனுக்ஷி ஆச்சி** உடனாக

---

எங்கள் பாலறாவாயர் நிலயத்தில் நிகழ இருக்கும் சகஸ்ர சந்திர தரிசன சதாபிஷேக முத்துவிழாவிற்குத் தாங்கள் வந்திருந்து சிறப்புச் செய்ய வேண்டுகிறேன்.

5, சம்பந்தர் தெரு,
தேவகோட்டை - 623 302.

அன்புள்ள,
வயிநாகரம் **இராம. சொக்கலிங்கம்**

:- தங்கள் நல்வரவை விரும்பும் -:

வயிநாகரம் நாக. வேங்கடாசலம் செட்டியார்
,, சித. சோமசுந்தரம் செட்டியார்
,, நாக. லெட்சுமணன் செட்டியார்
,, க. சோமசுந்தரம் செட்டியார்
,, ராம. நாகப்ப செட்டியார்
,, ராம. வேங்கடாசலம் செட்டியார்
,, நாக. நாகப்ப செட்டியார்
,, ராம. சோமசுந்தரம் செட்டியார்
,, ராம. ரெங்கநாதன் செட்டியார்
,, சொ. சோமசுந்தர இராமநாதன் B.Com, MBM,
,, விசாலாக்ஷி சொக்கலிங்கம்

கு. கரு. வெ. இராமநாதன் செட்டியார்
வீர. ராம. ராம. இராமநாதன் செட்டியார்
அழ. அழகப்பன் B.Sc., MBA
மீனுக்ஷி அழகப்பன்
அழ. சித்சபேசன்
சீதாலக்ஷ்மி சித்சபேசன்
ஞானப்பூங்கோதை காசிநாதன்
சிவகாமி - மீனுட்சிசுந்தரம்
மீனுட்சி - சோமசுந்தரம்
அழ. இராமநாதன்

---

நாதசுர இன்னிசை : மதுரைத் திருக்கோவில், ஆஸ்தான வித்துவான், நாதகான பாஸ்கர தெய்விக நாதமணி N. அழகுசுந்தரம் குழுவினர்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

'' சைவ சித்தாந்த சரபம் ''
சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் தமிழகச் சைவநெறிக் கழகம்

தேவகோட்டையில்

# பதினேழாவது சிவபூசை மாநாட்டு அழைப்பிதழ்

பேரன்புடையீர்!

எல்லாம் வல்ல ஸ்ரீ மீனாக்ஷி அம்மையார் உடனுறை சொக்கலிங்கப் பெருமான் திருவருளால், நம் குருநாதர் 'சைவ சித்தாந்த சரபம்' சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் ஐயா அவர்களது சகஸ்ர சந்திர தரிசன சதாபிஷேக முத்துவிழாவின் அங்கமாக, நிகழும் யுவ வருஷம் மார்கழி மாதம் 4-ந் தேதி (19-12-95) செவ்வாய்க்கிழமை நமது கழகத்தின் பதினேழாவது சிவபூசை மாநாடு தேவகோட்டை சம்பந்தர் தெரு, ''பாலருவாயர் நிலையத்தில்'' நிகழ இருக்கிறது. அன்பர்கள் வந்து கலந்துபயன்பெற வேண்டுகிறோம்.

அன்புள்ள,

'சிவநெறிச் செல்வர்'
**தைலா. கோபால்சுவாமி**
தலைவர்

'சிவநெறித்தொண்டர்'
**இரா. சரவணபவானந்தன்** பி.காம்.,
செயலாளர்

'சிவநெறித்தோன்றல்'
**நா. சா. இராமநாதன் செட்டியார்**
துணைத்தலைவர்

'சிவநெறிப்புலவர் மணி'
**பா. சுந்தர்** எம்.ஏ.,
இணைச்செயலாளர்

'சிவநெறிச்செல்வி'
**திருமதி இராஜம் சேதுராமன்** எம் பி பி.எஸ்.
துணைத்தலைவர்

'சிவநெறித்தொண்டர்'
**க. சக்திவேல்**
துணைச்செயலாளர்

செயலகம் :
47, அக்ரஹாரம், வரகனேரி, திருச்சி - 620 008.

உ

சிவமயம்

# நிகழ்ச்சிகள் :

17—12—1995 ஞாயிறு மாலை

1. இடபக்கொடி ஏற்றுதல்
   'சிவாகம ஞானபானு' சிவஸ்ரீ **பிச்சை குருக்கள்** பிள்ளையார்பட்டி
2. விநாயகராலய வழிபாடு
3. சாந்தி கலச ஸ்தாபனம், கலச பூசை, யாக பூசை. பூரணகுதி முதலியன
4. இரவு வில்லிசை நிகழ்ச்சி, பொருள் : '' முத்துவிழா நாயகர்''

18—12—95 திங்கட்கிழமை காலை

1. சாந்தி கலசபூசை, யாக பூசை, பூரணகுதி முதலியன
2. பகல் 11-00 மணியளவில் சதாபிஷேக அபிஷேகம்
3. மாகேசுவர பூசை, 3-00 மணியளவில் பாராட்டுக்கூட்டம்
4. மாலை 6-00 மணி அளவில் சிவாலய வழிபாடு
5. 9-00 மணி அளவில் குருமூர்த்திகளை அருட்கொழுவில் எழுந்தருளுவித்து வழிபாடு செய்து அருட்பிரசாதம் பெறுதல்
6. முத்துவிழா மலர் வெளியீடு

19—12—1995 செவ்வாய்க்கிழமை காலை

1. சிவபூசகர்களில் ஆன்மார்த்த பூசை, சிவதீட்சை வழங்குதல்
2. சம்வத்ஸர பவித்ர பூசையும் குருபாத பூசையும்
3. மாகேசுவர பூசை
4. மாலை 3-00 மணி கழகப்பொதுக்குழுக் கூட்டமும், சிறப்புரைகளும்
5. விதிமலர் வெளியீடு
6. நன்றியுரை

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# முத்து விழா நாயகர்



டாக்டர் ந. மாணிக்கம் பதிப்பாசிரியர்

(இக்கட்டுரை ஆசிரியர் தமிழ் இலக்கண இலக்கியங்களை முறையாகக் கற்றுப்பல்கலைக்கழக முதுநிலைத் தேர்வுகளில் வெற்றி பெற்று மதுரைத் தியாகராசர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராய் இருந்து இப்பொழுது தமிழ்த் துறைத் தலைவராய்ப் பணியாற்றுபவர். சிவதீட்சை (முத்துவிழா நாயகரிடம்) பெற்று முறையாகச் சைவநெறியில் ஒழுகி வருபவர். இக்கட்டுரை, முத்துவிழா நாயகரின் மணி விழா மலர், பவள விழா மலர்களில் வெளிவந்தவையையும் முத்துவிழா நாயகருடன் நெருங்கிப் பழகியவர்களிடம் கேட்டுத் தெரிந்தவை களையும் கொண்டு எழுதப்பெற்றது.)

— விழாக்குழுச் செயலர்

**முகவுரை :-** நிலவுலகத்தில் உள்ள படைப்பு வகைகளை இரண்டு என்று பெரியோர் கூறுவர். அவற்றுள் ஒன்று சிவபெருமானது நியதிப்படி தொழிலாற்றி வரும் நான்முகனால் படைக்கப் பெறுவது, இன்னொன்று சிவபெருமானாலேயே செய்யப்பெறுவது' இவற்றைப் ''பிரமசிருட்டி,'' ''சிவசிருட்டி,'' என்று பெரியோர் கூறுவர். பிரமசிருட்டி உயிர்கள் செய்த வினைப்பயனுக்கேற்ப நிகழ்வது, சிவசிருட்டியால் படைக்கப் பெற்றவர்கள் தாமும் உய்தியடைந்து, மற்றவர்களுக்கும் உய்தி அடையும் வழியை வகுத்து உணர்த்துவார் கள். இவர்களே, என்றும் புகழ் உடம்புடன் வாழுகின்ற சிறப்புடையர்கள். முன்னைப்புண்ணிய வசத்தால் நிலவுலகில் தோன்றி, நிற்க வேண்டிய நெறியில் நின்று, பிறரையும் நெறி நிறுத்தும் உயர்வுடையவர்கள், நம் முத்துவிழா நாயகர் சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் ஆவார்கள். அவர்களது வாழ்க்கை வரலாற்றை இங்கு இக்கட்டுரை மூலமாக ஓரளவு தெரிந்துகொள்வோம்.

## தோன்றிற் புகழொடு தோன்றுக :-

நிலமகளின் திருமுக மண்டலம் போல விளங்கும் தென்னாடு, சிவபுண்ணிய சீலர்களின் திருஅவதாரம், வாழ்க்கை, உபதேசம், முதலியவற்றால் தொன்று தொட்டுச் சிறப்புற்று விளங்குவது. சமய குரவர்களும் சந்தான குரவர்களும் போன்ற ஞானவான்கள் தோன்றி இந்நாட்டை உயர்வுடையதாகச் செய்தார்கள். சேர, சோழ, பாண்டியர்களாகிய தமிழ் வேந்தர்கள், பல திருக்கோயில்களை எழுப்பித் தெய்வீக நலத்தை மக்கள் தொடர்ந்து பெறுவதற்கு வழி செய்தார்கள். முடியுடை வேந்தர்களாகிய அவர்களுக்குப் பின்னர் அவர்கள் செய்த சிவபுண்ணியச் செயல்களை மேற்கொண்டு, ''மன்னர் பின்னோர்'' என்ற தங்கள் சிறப்புக்கேற்பத் திருப்பணிகள் பலவற்றைச் செய்தவர்கள், மகுட தன வைசிய நாட்டுக்கோட்டை நகரத்தார்களே. இம்மரபினர் பாண்டிய நாட்டின் தென்கிழக்குத் திசையில், முன்பு தொண்ணூற்றாறு ஊர்களில் சேகரமாக வாழ்ந்து இப்போது எழுபத் தெட்டு ஊர்களில் வசித்து வருகிறார்கள். இப்பகுதி ''செட்டிநாடு'' என வழங்கப்பெற்று வருகிறது.

இப்போது கோனாபட்டு என்று வழங்கப்பெறும் கோநகரில், நகரத்தார் மரபில் திருக்கோயில், திருநந்தனவனம், திருக்குளம், பாடசாலைகள் ஆதிய சமய நிறுவனங்களைத் தோற்றுவித்தும். வளர்த்தும் வருகின்ற குடும்பத்தினரை, அவ்வூராரும் மற்றையோரும், ''கோயில் செட்டியார் வீட்டினர்,'' என்று பாராட்டுவார்கள், அந்தக் குடும்பத்தில் தோன்றித் தமது முன்னோர்கள் செய்த அறப்பணிகளை வளர்த்தும், தம்மால் தோற்றுவிக்கப் பெற்ற கல்விச்சாலை முதலியவற்றை வளர்த்தும், பெருமை பெற்றவர் முருகப்ப செட்டியார் என்னும் பெயர் உடையவர். இவர்கள் அடிக்கடி ''மகாதேவ, மகாதேவ'' என்றே சொல்லுவார்கள், ஆகையால் இவர்களை மகாதேவ முருகப்ப செட்டியார் என்று எல்லோரும் பாராட்டினார்கள், இவர்களது சிவபக்தி, திருத்தொண்டு ஆகியவற்றை இவர்களது தூய வெண்ணீறு, துதைந்த பொன்மேனியும், தாழ்வடமும் நாயகன் சேவடி தைவரு சிந்தையும், விளக்கிக் காட்டும். இவரது மனைவியார் சீதை ஆச்சி. இவ்வம்மையார் அறவோர்க்கு அளித்தல், அந்தணர் ஓம்பல், துறவோர்க்கு எதிர்தல் முதலிய இல்லற நலன்களும் கணவர் சொற்கடவாமை முதலிய கற்பு நலங்களும் வாய்க்கப்பெற்றவர். இவர்களது இரண்டாவது புதல்வராக நம் முத்து விழா நாயகர் ஆனந்த வருஷம் மார்கழி மாதம் 26 ந் தேதி (9—1—1915) சனிக்கிழமை தோன்றினார்கள்.

இவர்கள் தோன்றிய காலத்தில், இவர்கள் தந்தையார் நிறுவிய கற்பகவிநாயக கலாசாலைத் தலைமை ஆசிரியராக இருந்த பண்டித கோபாலய்யர் இவர்கள் வீட்டில் எல்லோரும் கேட்டு மகிழும்படி கம்பராமாயணப் படனம் செய்து வந்தார்கள். முத்துவிழா நாயகருக்குத் தமது தந்தையாரின் பெயராகிய சுப்பிரமணியன் என்பதை வைத்து அழைக்க எண்ணிய தந்தையார், இராமாயண படனகாலத்தில் இவர்கள் தோன்றியதால் இவர்களுக்கு ''இராம சுப்பிரமணியன்'' என்று சூட்டினார்கள்.

முத்துவிழா நாயகர் தோற்றக்காலத்தில் கோனாபட்டில் பிள்ளையார்பட்டிக் கோவிலார்க்குச் சொந்தமாக உள்ள கற்பக விநாயகர் திருக்கோயில் திருக்குளம் முதலியவற்றின் திருப்பணியிலும் தமது மூத்தமகன் பழனியப்ப செட்டியார் முறையாகக் கற்கவேண்டும் என்று அமைத்த கற்பக விநாயக கலாசாலைத் திருப்பணியிலும் இடையீடின்றி மகாதேவா ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள். தெய்வ விளக்கமும் அறிவு விளக்கமும் தரும் திருப்பணிகளில் ஊக்கத்துடன் பெற்றோர்கள் ஒன்றி இருந்த காலத்தில் தோன்றிய காரணத்தால் நம் முத்துவிழா நாயகருக்கு அவ்விருவகை விளக்கங்களும் கருவிலேயே அமைந்த திருவுடையனவாக ஆயின.

## இளமை வாய்ப்பு:

மகாதேவா, சைவ ஆதீனங்களாலும் சைவப் பெரும் புலவர்களாலும் பாராட்டத்தக்க சிறப்பு உடையவர்களாய் இருந்த காரணத்தால் நம் முத்துவிழா நாயகருக்கு இளமை யிலேயே சான்றோர்கள் பலரது தொடர்பு எளிமையாக அமைந்தது.

## குழந்தை பருவத்துச் செய்தி ஒன்று:

1918ஆம் ஆண்டில் திருவாவடுதுறை ஆதினத்தில் 17வது பட்டத்தில் எழுந்தருளி இருந்தவர்கள் ஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகள், அவர்களது வைதிக லௌகிக அறி வாற்றல் அன்றும் இன்றும் என்றும் போற்றத்தக்கவை. அவர்கள் குன்றக்குடியை அடுத்த துலாவூரில் உள்ள ஸ்ரீ நிரம்ப அழகிய தேசிக மூர்த்திகளின் பரம்பரையில் தோன்றியவர்கள். அவர்களுக்கும் அவர்கள் தோன்றிய துலாவூருக்கு ஏழு கல் தொலேவில் உள்ள கோனுபட் டில் வாழ்ந்த மகாதேவாவுக்கும் இருந்த தொடர்பினுல் மகாதேவா அடிக்கடி திருவாவடு துறைக்குச் சென்று தரிசிப்பது வழக்கம். 1918ம் ஆண்டில் மகாதேவா மனேவியாருடனும் மைந்தராகிய முத்துவிழா நாயகருடனும் திருவாவடுதுறைத் திருமடத்திற்குச் சென்றிருந்த போது, ஸ்ரீலஸ்ரீ சன்னிதானம் தமது சம்பிரதாயத்தையும் கடந்து முத்துவிழா நாயகரைத் தமது மடிமீது இருத்தித் திருநீறு பூசி, ''இவன் திருஞானசம்பந்தரைப் போல வருவான்', என்று வாழ்த்தினுர்கள். அப்போது சன்னிதானம் அவர்கள் ஆசீர்வதித்தபடியே நம் முத்துவிழா நாயகருக்குத் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளேத் தமது 'உபாசனுகுரு' வாகக் கருதும் வாய்ப்பு வாய்த்தது.

## இளம்பருவ நற்செயல்கள்:-

பிள்ளேப்பருவத்தில் இருந்தே நம் முத்துவிழா நாயகர் தம்மோடொத்த சிறுவர்களுடன் கூடி விளேயாடுவதும், வீண் பொழுது போக்குவதும் செய்யாமல், கல்வி கற்பதிலேயே விருப்பத்துடன் பொழுது போக்கி வந்தார்கள். தந்தையார் நிறுவிய கற்பக விநாயக கலா சாலேயில் உடன் பயின்ற மாணவர்கள் அனேவரிலும் தலேசிறந்த மாணவராய் விளங்கித் தேர்வுகளில் ஆண்டுதோறும் முதலிடம் பெற்றுர்கள். கலாசாலேயில் தமிழ் இலக்கண இலக்கிய நூல்களே மதுரைத் தமிழ்ச்சங்கப் பாடத்திட்டத்தின்படி பயின்றும் வடமொழிக் காவியங்கள், பண்ணிசைத் திருமுறைகள் ஆகியவற்றைப்பயின்று ஹார்மோனிய வாத்தியப் பயிற்சியும் அப்போது பெற்றுர்கள். இவர்களது பன்னிரெண்டாவது வயதில் இவர்களுக்குத் தமிழாசிரி யராய் இருந்த பொன்னுசாமிபிள்ளே, யாப்பிலக்கணத்தில் வெண்பா இலக்கனத்தை விளக்கிச் சொல்லி ஒரு பெண்பாவை 'கந்தா' என்று தொடங்கி, ''மகிழ்ந்து'' என்று முடியும்படி இயற்றி வரும்படி வகும்பு மாணவர்கள் அனேவருக்கும் கட்டளேயிட்டார். அதன்படி நம் முத்துவிழா நாயகர், அப்போது பாடிக்கொடுத்த வெண்பா

'' கந்தா முருகா கடம்ப மலர் மார்பா உன்
செந்தா மரையடியைச் சிந்தித்தேன் - தந்தாள்வாய்
கல்வியொடு செல்வமுதல் காசினியில் எவ்வளமும்
மல்கிச் சிறக்க மகிழ்ந்து'' என்பதாகும்.

இவர்களது தமிழ் இலக்கண இலக்கியங்களுக்குப் பண்டித வித்துவான் ஆழ்வாரய்யங் காரும் வடமொழி நூற்பயிற்சிக்கும் ஆங்கிலப்பயிற்சிக்கும் கணபதி சாஸ்திரிகளும் திருமுறை இசைப்பயிற்சிக்குப் பாலசுப்பிரமணிய தேசிகரும் ஆசிரியர்களாய் இருந்தார்கள்.

தமிழாசிரியர் மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் பயின்று பண்டித பட்டமும் சென்னைப் பல்கலைக்கழக வித்துவான் தேர்வுப்பட்டமும் பெற்றவர். வடமொழி ஆசிரியர் முறையாக வடமொழிப் பயிற்சி ஆங்கிலப்பயிற்சி பெற்றவர். இசையாசிரியர் தென்காசியில் உள்ள சைவ ஆதீனங்கள் ஒன்பதில் ஒன்றான தத்துவப்பிரகாசர் ஆதீனத்தில் அப்போது குருமூர்த்திகளாய் இருந்த ஒப்பிலாமணி தேசிகரின் புதல்வர், முறையாகச்சமய விசேட நிர்வாண 'தீட்சைகளையும் ஆசாரியாபிஷேகத்தையும் பெற்றவர். இவருக்கு நெருங்கிய நண்பராகக் கோனாபட்டை அடுத்த ஆத்தங்குடியில் ராஜாமணி ஐயங்கார் என்பவர் இருந்தார். அவர் ராமநாதபுரம் சமஸ்தானத்தில் பூச்சி ஐயங்கார் என்று வழங்கிய ஸ்ரீனிவாச ஐயங்காரிடம் அரியக்குடி சங்கீத ரத்னாகரம் ராமானுஜ ஐயங்காருடன் இசைப்பயிற்சி பெற்றவர். அவர் நம் முத்துவிழா நாயகரின் இசை நுணுக்கப் புலமையை இளமையில் கண்டு வியந்து பாராட்டியதுண்டு.

## முதலில் மாநாட்டுத் தலைமை:-

1929ம் ஆண்டில் அதாவது நம் முத்துவிழா நாயகரின் பதினான்காவது வயதிலேயே பலரும் மதித்து பாராட்டும் அளவிற்குச் சிறந்த பேச்சு வன்மை முத்துவிழா நாயருக்கு வாய்த்தது. சென்னையில் ஆன்மீகத் துறையில் சிறந்தவராக வாழ்ந்தவர், பலகாலம் இமயமலையில் தவமிருந்து திருவருள் பெற்றவர், சாதுசங்க மகாசபை என்னும் ஒரு நிறுவனத்தை நிறுவித் தென்னாடு, வடநாடுகளில் அப்போதிருந்த பலசாதுக்களைக் கூட்டிப்பல ஊர்களில் மகாநாடு நடத்தியவர் கருணானந்த சுவாமிகள். அவர் கோனாபட்டை அடுத்த கீழச்சிவப்பட்டி என்னும் ஊரில் பாடுவார் முத்தப்ப செட்டியார் பரம்புரையில் தோன்றிய காசிவிசுவநாதன் செட்டியார் நிறுவிய ''மீனாட்சி சுந்தரேசுவரர்'' வித்யாசாலையில் ஒரு மகாநாட்டைக் கூட்டி அந்த மகாநாட்டுக்குப் பதினான்கு வயதே நிரம்பிய நம்முத்துவிழா நாயகரைத் தலைமையேற்று நடத்தித் தரும்படிக் கேட்டார். அந்த மாநாட்டில் பல ஆன்மீகப் பெரியவர்கள் கலந்து கொண்டது குறிப்பிடத்தக்கது.

## வளர வந்த குடும்பம்:-

செட்டி நாட்டு ஊர்களில் அமராவதிபுதூர் என்பதும் ஒன்று. முன்னைப் பிறவிகள் பலவற்றில் செய்த பசுபுண்ணியத்தின் பயனாகவே பதிபுண்ணியம் செய்ய வாய்க்கும். நாட்டுக்கோட்டை நகரத்தார் மரபினர் பதிபுண்ணிய ஈடுபாட்டில் பெரிதும் சிறந்தவர்கள். ஏறக்குறைய நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்வரை நகரத்தார்கள் திருநந்தனவனம், திருக்குளம், பசுமடம், வேதசிவாகம பாடசாலைகள் முதலானவற்றை நிறுவி அவற்றைப் பாதுகாத்து வந்தார்கள். ஆனால் சிவாலயத்திருப்பணியை நகரத்தார்களில் முதன்முதலாகச் செய்தவர்கள் வயிநாகரம் குடும்பத்தவர்களே. அவர்கள் வாழ்ந்த ஊர் அமராவதிபுதூர். அது ஒரு சிறிய கிராமம் என்றாலும், வயிநாகரம் குடும்பத்தார் வாழ்க்கையால் எல்லோரும் அறியும் வாய்ப்பில் அது இருக்கிறது,

வயிநாகரம் குடும்பத்தில் நாகப்பச் செட்டியார் என்பவர் இளமையில் தமது மரபினர்களுக்கு வேண்டிய பள்ளிப்படிப்பை முடித்துக் கொண்டு தொழில் நிமித்தம் சிறுவயதில் மதுரைக்குச் சென்று அங்கு ஒரு துணிக்கடை நிறுவனத்தில் மாத வேதனம் ரூ. ஏழுக்கு அமர்ந்தார்கள். மதுரைக்குச் சென்றது முதல் ஸ்ரீ மீனாட்சி சொக்கலிங்கப் பெருமானிடத்தில் ஆராத அன்பு கொண்டு வழிபாடு செய்த சிறப்பினால் அவர்கள் உலகியல் வாழ்வில் நாளுக்கு நாள் உயர்ந்து, மதுரை தெற்காவணி மூலவீதி ஜடாமுனி கோவில் தெருவில் ஒரு துணிக்கடைக்கு முதலாளி ஆனார்கள். அந்தநாளில் நாகப்பர் குடும்பம் பொருள் வசதியில் நடுநிலைமையில்தான் இருந்தது. நாகப்பரின் தந்தையார் ராமநாதன் செட்டியார், தாயார் வள்ளியம்மை ஆச்சி. நாகப்பர் மூத்த புதல்வர், இளையவர்கள் வேங்கடாசலம்,

அண்ணுமலே, சுப்ரமணியன் என்னும் மூவர். நாகப்பரின் தொழில் துறைகளிலும், சிவப்பணிகளிலும் முழு உதவியாக இருந்தவர் வெங்கடாசலம் செட்டியாரே. இவர்கள் இருவரும் சமய விசேட நிர்வாண தீட்சை பெற்றவர்கள். நாகப்பர் மதுரையில் வைத்த துணிக்கடை அவரதும் வேங்கடாசலரதும் முயற்சியால் வைக்கப்பட்டதாயினும், அந்தக் கடையைக் குடும்பபொதுக்கடையாகவே கொண்டு நடத்தி வந்தார்கள். அந்தக் காலத்தில் மதுரைத் திருக்கோயிலில் அபிஷேகத்திற்கு பாலும் அலங்காரத்திற்குப் பூமாலேகளும் முறையாகக் கொடுத்து உச்சிக்காலம் அர்த்தயாம வழிபாடுகளே வழுவாது செய்து வந்தார்கள். மீனுட்சியம்மையின் திருவருளால் வாணிபம் செழித்து நாகப்பட்டிணம், சென்னே, கும்பகோணம், தூத்துக்குடி, பம்பாய், கல்கத்தா, கொழும்பு, ரங்கூன், செய்கோன், பினுங்கு, சிங்கப்பூர், ஆகிய ஊர்களில் வயிநாகரம் விலாசக்கடைகள் வைக்கும் வாய்ப்பு வந்தது. தூத்துக்குடியில் முத்துக்குளியல் சங்குக்குளியல் ஆகியவற்றில் பெரும் பொருளே ஈட்டினுர்கள். செல்வபெருக்கம் மிகுதியாக ஆக, ஸ்ரீ மீனுட்சி சொக்கேசரிடத்தில் ஈடுபாடும் அதிகமாகிக் கொண்டே வந்தது. அந்த நாளில் திருக்கோவில் பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருமலே நாயக்கருக்குப் பிறகு சரியாக கவனிக்கப் பெருமையால், பெரிதும் சீர்கேடாக இருந்தது.

## மதுரைத் திருப்பணி :-

1863 ல் மதுரைத் திருக்கோயில் நிர்வாகத்திற்கென அரசாங்கத்தாரால் நியமிக்கப் பெற்ற ஐந்து உறுப்பினர் குழுவில் நாகப்பர் தலேவராய் நியமிக்கப்பெற்ருர்.

அப்போது காரைக்குடியில் நல்ல இல்லற வாழ்வு வாழ்ந்து துறவறத்தை மேற்கொண்டவரும் தத்துவ நூல்களிலும் சிற்ப நூல்களிலும் வன்மை பெற்றிருந்தவரும் மதுரையில் தங்கியிருந்தவருமாகிய ஸ்ரீ மெய்யப்ப சுவாமிகளின் நட்பு நாகப்பருக்கு வாய்த்தது. அவர்கள் விரும்பியதை ஏற்று முதலில் திருக்கோயிலில் பழுது அடைந்திருந்த சித்தி விநாயகர் கோவிலேப் புதுப்பித்தார்கள். அதைத் தொடர்ந்து ஸ்ரீ மீனுட்சியம்மன் கோவில் முதற் பிரகாரத் திருமதில், பள்ளியறை முதலியவை புதுப்பிக்கப் பெற்றன. அர்த்தயாமத்தில் சுவாமி அம்பாள் எழுந்தருளியிருக்கும் திரு ஊசலுக்கு பொன்தகடு போர்த்தினுர்கள். திருக்கோவில் மண்டபங்களில் இருள் நிறைந்திருந்த இடங்களில் பாவு கற்களேத்தூக்கி பலகணிகளே அமைத்தார்கள். இராஜகோபுரங்கள் பன்னிரெண்டிலும் பல ஆண்டுகளாக வாழ்ந்து வந்த குரங்குக் கூட்டங்களே அப்புறப்படுத்தினுர்கள். இது ஒரு வியக்கத்தக்க செய்தி. எந்த உயிருக்கும் இடையூறு செய்வது முறையல்ல என்னும் சைவ நெறிமுறையைக் கடைப்பிடித்து மண்ணுல் ஆகிய குடங்கள் பலவற்றில் கள்ளே ஊற்றி அவற்றில் வறுத்த வேர்க்கடலேகளே இட்டுக் கோபுரங்களில் வைத்து அதை உண்டு மயங்கிக் கிடந்த குரங்குகளே, உயிருடன் பிடித்து வண்டிகளில்ஏற்றி, நீண்ட தூரத்திற்கு அப்பால் கொண்டுபோய் விட்டுவிட்டார்களாம். இப்போது மொட்டைக் கோபுரம் என்று வழங்கும் வடக்கு கோபுரம் அப்போது நிலேமட்டத்திற்கு மேல்கட்டப் பெருமல் இருந்தது. பாண்டியர்கள் காலத்திற்குப் பின்னர் திருமலே நாயக்கர் காலம் வரை பலர் அந்தக்கோபுரத்தைக் கட்டி முடிக்க முயன்றார்கள். அந்தக்கோபுர வாயிலில் எழுந்தருளியுள்ள முனீஸ்வரர், அந்தக் கோபுரம் வயிநாகரம் குடும்பத்தாராலேயே கட்டி முடிக்கப்பெறவேண்டும் என்னும் திருவருட்குறிப்பைத் திருவுள்ளம் கொண்டு, அவர்கள் யாரும் அதைக் கட்ட முடியாது ஒதுக்கும்படித்தடுத்தார். அந்தக் கோபுரத்தைக் கட்டிமுடிக்கக் கருதிய தமது மூத்த சகோதரரின் கட்டளேயைச் சிரமேற்கொண்டு, வேங்கடாசல ஐயா கோபுர நிலேமட்டத்தில் யாரும் அஞ்சி ஒதுங்கி நின்ற வேளேயில் தாம் மட்டும் ஏறிக் கோபுர பணிக்குத் தொடக்கம் செய்தார். அதைத் தொடர்ந்து கோபுர வேலே சிறப்பாக முடிந்து அது முழுக்கோபுரமாய்க் காட்சியளித்துக்கொண்டிருக்கிறது. என்ருலும் அந்தக்கோபுரத்திற்கு முன்னே இருந்த மொட்டைக் கோபுரம் என்ற பெயரே இன்னும் மாறவில்லே,

## குடும்பத் திருப்பணிகள்:

திருக்கோவிலில் உள்ள எல்லாக் கோபுரங்களையும், விமானங்களையும் பழுது பார்த்து வண்ணம் தீட்டி விளங்க வைத்தார்கள். சித்திரை வீதியில் நான்கு திருமதில்களையும் ஒட்டி வேலி அமைத்துத் திருநந்தனவனம் அமைத்தார்கள். வேலி அமைத்திருக்கும் இடத்தை ஆக்கிரமித்துக்கொண்டிருந்த பலருக்கு பொருள் கொடுத்து அவர்களை வெளியேற்றினார்கள், அப்படி அவர்களை வெளியேற்றுவதற்கு அதிகாரப் பூர்வமான உதவியைச் செய்தவர் அப்போது அங்கு ஜில்லா கலெக்டராக இருந்த குரோல் துரை என்பவர். அவர் திருப்பணிக்கு நல்ல உதவியாளராக இருந்ததால் சித்திரை வீதிகளைச்சுற்றி அமைத்த அடைப்பு நுழைவு வாயிலில் ‘குரோர்கேட்’ என்னும் பெயரை வைத்தார்கள். திருக்கோயிலில் பதினாறுகால் மண்டபம், நூற்றுக்கால் மண்டபம், ஆயிரக்கால் மண்டபம், மீனாட்சி நாயக்கர் மண்டபம், அட்டசத்தி மண்டபம், பசுத்தொழுமண்டபம், யானை மஹால், கிளி மண்டபம், வசந்தராயர் மண்டபம், கழுவேற்ற மண்டபம், கொடிக்கம்ப மண்டபம் ஆகியவை பழுது பார்த்துப் புதுப்பிக்கப்பெற்றன. கொடிக்கம்ப மண்டபத்தில் சிற்ப வேலைப்பாடுகளுடன் கூடிய திருவுரு வங்கள் அமைந்த தூண்களை நிறுத்தி அழகு செய்தார்கள். திருக்கல்யாண மண்டபம் பழுதுப்பார்க்கப்பெற்று அதன் முன்னால் சித்திர வேலைப்பாடுகள் அமைந்த செப்போட்டு மண்டபம் அமைக்கப்பெற்றது. பொற்றாமரைக் குளம் பழுது பார்க்கப்பெற்றுப் படித்துறை களில் கைப்பிடிச் சுவர்கள் அமைக்கப்பெற்றன. ஆடி வீதிகள் நான்கிலும் கருங்கல் தளங்கள் போடப்பெற்றன. சுவாமி கோவிலில் முதல்பிரகார திருமதில் ஆகிய கபாலி மதிலில் அறுபத்தி மூன்று நாயன்மார்கள் வரலாற்று சித்திரங்களும், கிளிமண்டபத்து தட்டோடு, மேற்பகுதியில் விநாயகர், முருகன், மாகேசுவர மூர்த்திகளின் திருவுருவச் சித்திரங்களும், பொற்றாமரை வடக்கு கிழக்கு திருமதில்களில் திருவிளையாடல் புராணச் சித்திரங்களும் எழுதப் பெற்றன. திருக்கல்யாணச் சித்திர மண்டபத்தின் மேற்பகுதியில் தென் மேற்கில் முதலிடத்தில் நாகப்ப ஐயா, வேங்கடாசல ஐயா ஆகிய இருவரின் உருவப்படங்கள் இருப் பதை இன்றும் நாம் காணலாம். வண்டியூர் தெப்பக்குளமும் மைய மண்டபமும் பழுது பார்த்து புதுப்பிக்கப்பெற்றன.

திருவிழாவிற்காக இரண்டு தங்கச்சப்பரங்கள், வெள்ளியில் இரண்டு பெரிய இடபம், பெருச்சாளி, மயில், கற்பக விருட்சம், சிம்மம், பூதம், கயிலாயம், அன்னம், காமதேனு, திருநந்தித்தேவர் ஆகிய வாகனங்களும், வெள்ளி சிம்மாசனம் இரண்டும், இரண்டு தங்கப் பல்லாக்குகள், இரண்டு தங்கக்குதிரை வாகனங்களும் செய்துவைக்கப்பெற்றன. தங்கத்திலும் கற்கள் வைத்தும் இழைத்தும் பல திருஆபரணங்கள் செய்யப் பெற்றன. திருக்கோயிலில் நித்திய நைமித்திக பூசைகளுக்கென்று வயிநாகரம் குடும்பத்தார் அமைத்த கட்டளைகள் 1875ம் அண்டுக்கணக்குப்படி ஆண்டுக்கு ஏறக்குறைய 40,000/- ரூபாயாகும். அந்தத் தொகை ஆண்டு தோறும் நிரந்தரமாகத் திருக்கோயிலுக்குக் கிடைக்க வேண்டும் என்று கருதி, அந்த வருமானம் வரத்தக்க படமாத்தூர் குருந்தப்பட்டு முதலிய கிராமங்களை திருக்கோயிலுக்கு வாங்கி வழங்கினார்கள்.

## இன்னும் சில திருப்பணிகள் :

திருப்பரங்குன்றம், திருவாதவூர், திரும்புத்தூர். ஆகிய தலங்களில் அம்மன்கோவில் களும், திருஆப்பனூர், திருக்கானப்போர்ச் சோமேசுவரர் கோவிலும், திருவேடகம் கோயிலில் அடிப்படைப் பகுதியும் விருத்தாசலம் பல்லவனீச்சரம் அமராவதிப்புதூர் கண்டதேவி ஆகிய இடங்களில் உள்ள கோவில்களும் திருப்பணி செய்யப் பெற்றன. திருவொற்றியூர்பட்டம் பக்க நாயகர் கோவில், சீர்காழி திருநிலை அம்மன். திருஞானசம்பந்தர் திருக்கோயில்கள் புதுப் பிக்கப் பெற்றன. மதுரை அம்மன் சன்னதியில் அறுபத்துமூவர் குருபூசை மடம் நிறுவப்பெற்று அதன் பரிபாலனத்திற்கென்று மின்னிட்டாங்குடி, சேக்கக்குடி என்ற இரண்டு கிராமங்கள் வாங்கி வழங்கப் பெற்றன. திருக்கோயிலில் வயிநாகரம் கட்டளைக்கென அந்தக் காலத்தில்

பல அறைகள் இருந்தன. திருமாலைத் தொண்டு, திருவிளக்குத் தொண்டு முதலியவை களுக்கும் அபிடேகப் பொருள்கள் மடைப்பள்ளிப் பொருள்கள் பரிவட்டங்கள் வைத்துக் கொள்வதற்குத் தனித்தனி அறைகளும் இருந்தன. அர்த்தயாமத்தில் சுவாமிக்குப் பத்தாறு வேட்டியும் அம்பாளுக்கு வெண்ணிற ஆடையும் சாத்தக் கொடுத்தார்கள். அர்த்த யாமம் பள்ளியறைக் கட்டளையில் புதிதாக வெண்ணை உருக்கிச் சேர்ந்த நெய் கலந்த சம்பா அன்னம் நிவேதிக்கப்பெற்று, அனைவருக்கும் வினியோகிக்கப் பெற்றது. சித்திரைத் திருநாள் திருக் கல்யாண மண்டபப்படி சிறப்பாக நடத்தப்பெற்றது. ஆயிரக்கால் மண்டபத்தில் சிவாகம பாடசாலை ஒன்று நிறுவி முறையாக நடத்தி வந்தார்கள். கோயில் பணியாளர்களில் சிவாச்சாரியர்கள் பரிசாரர்கள் பதினறு பேர்களுக்கு நாள்தோறும் பகல் உணவு வழங்கப் பெற்றது.

இத்தகைய பெருஞ் சிறப்புடைய வயிநாகரம் குடும்பத்தில் நாகப்பையாவின் புதல்வர் இராமநாதன் செட்டியார் அவரது புதல்வராகத் தோன்றிச் சமய விசேட தீட்சை கள் பெற்றுச் சைவ நெறி வழுவாது வாழ்ந்து வந்தனர். வேங்கடாசலம் செட்டியார் இவரது மனைவியார் பல சிவபுண்ணியங்களைச் செய்த தேவகோட்டை சத்திரத்தார் வீட்டில் பிறந்த அலர்மேலு ஆச்சி. வேங்கடாசலம் செட்டியார் 1914ம் ஆண்டில் சீர்காழியில் சிவபதம் அடைந்த பிறகு அலர்மேலு ஆச்சி தேவக்கோட்டையில் தமது தாய் வீட்டிற்கு வந்து இளைய சகோதரர் அருணசலம் செட்டியார் (ரெட்டை அரு) ஆதரவில் தங்கி இருந் தார்.

1934ம் ஆண்டில் ரெட்டை அரு.வின் செய்கோன் கடைக்கு அலுவலராக அனுப்பப் பெற வேண்டுமென்று கேட்கத்தமது தந்தையாருடன் தேவகோட்டைக்கு வந்த முத்துவிழா நாயகரைத் தமது இல்லத்தில் தங்க வைத்து அவர்களது அறிவாற்றல் நற்குண நற் செயல்கள் முதலியவற்றை நேரில் கண்டு மகிழ்ந்து வயிநாகரம் குடும்பமும் முத்துவிழா நாயகர் பிறந்த குடும்பமும் ஒரே கோயிலாக (கோத்திரம்) இருந்தபடியால் அவர்களைத் தமது தமக்கையாருக்கு வளர்ப்புப் புதல்வராகக் கொள்ள எண்ணி அதற்குரிய முயற்சிகளைச் செய்ய அதன் பயனாகப் பவ வருஷம் ஐப்பசிமாதம் 5ந்தேதி தம் முத்துவிழா நாயகர் வயிநா கரம் குடும்ப உரிமையாளராக ஆனார்கள்.

அமராவதிப் புதூரில் வயிநாகரம் குடும்பத்தார் வாழ்ந்த அந்தக் காலத்தில் முத்து விழா நாயகரின் வளர்ப்புத்தாயார் அலர்மேலு ஆச்சி விருப்பப்படி முத்துவிழா நாயகர் தேவகோட்டையிலேயே தாய் மாமன் வீட்டில் தங்கி இருந்தார்கள். அப்போது ரெட்டைஅரு நிர்வாகத்தில் இருந்த தேவகோட்டை சைவப்பிரகாச வித்யாசாலையும் குருபூசை மடமும் இன்னும் பல சமய நிறுவனங்களும் ரெட்டை அரு. எஸ்டேட்டும் நம் முத்துவிழா நாயகர் கண்காணிப்பில் இருந்தன.

## திருமணம்

1935ம் ஆண்டு ஆனிமீ 28௳ தேவகோட்டை வயிரவன் கோயில் பெரிய வகுப்பு கு. கரு.வெ. அண்ணாமலை செட்டியார் புதல்வி மீனாட்சி ஆச்சிக்கும் முத்துவிழா நாயகருக்கும் திருமணம் நிகழ்ந்தது. திருமணத்துக்கு வந்திருந்த தமிழ்ப்புலவர்கள் அனைவரும் செந்தமிழ் பாடல்களால் வாழ்த்துக் கூறிச் சிறப்பித்தார்கள்.

## மாளிகை அமைப்பு

வயிநாகரம் குடும்பத்தார் அனைவரும் அமராவதி புதூரில் வசித்து வந்தார்களாயினும் முத்துவிழா நாயகரின் அன்னையார் அலமேலு ஆச்சி பல ஆண்டுகள் தேவகோட்டையில் தமது தாயார் வீட்டிலேயே தங்கியிருந்ததால் அவர்கள் விருப்பப்படி தேவகோட்டையில் புதிதாக ஒரு இடம் வாங்கி அதில் ஒரு இல்லம் அமைக்க 1935ம் ஆண்டில் தொடக்கம் செய்து 1936ம் ஆண்டு சித்திரைமீ 4உ அந்த இல்லத்திற்குப் ''பாலருவாயர் நிலையம்'' என்று பெயர் சூட்டிப் புதுமனை புகும் விழா நிகழ்த்தப்பெற்றது. அப்போது தேவக்கோட்டை பேரூராட்சி மன்றக்குறிப்பில் தமது இல்லம் அமைந்த தெருவுக்கு ஏற்கனவே இருந்த பெயரை மாற்ற வேண்டும் என்று, ஊரை நகராட்சி மன்றத் தகுதிக்கு உயர்த்த அரசினரால் நியமனம் பெற்று வந்த நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்த பரம்பரைச் சைவ மரபினராகிய ஆறுமுகக் கவிராஜிடம் சொல்லிச் ''சம்பந்தர் தெரு'' என்று பெயர் மாற்றம் செய்ய முத்துவிழா நாயகர் ஏற்பாடு செய்தார்கள்.

## சான்றோர் தொடர்பு

காரைக்குடி முத்துப்பட்டணத்தில் தனவணிக மரபில் தோன்றி யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர், மதுரை மெய்யப்ப சுவாமிகள் தேவகோட்டை வன்கருண்டச் செட்டியார் ஆகியவர்களிடம் முறையாகத் தமிழிலக்கண இலக்கியங்களையும் வடமொழி நூல்களையும் தோத்திர சாத்திரங்களையும் கற்றுச் சமய விசேட நிருவான தீட்சைகளைப் பெற்றுத் தம் வாழ்நாளில் பெரும்பகுதியை சமயப்பணியிலேயே வைத்துக் கொண்டவர்களாகிய சொக்கலிங்க ஐயா அவர்கள், தமிழகத்தில் சங்கத்தமிழ் நூல்கள் அனைத்தும் ஏட்டுச் சுவடிகளிலேயே இருந்த காலத்தில் அவற்றைப் பெரு முயற்சி செய்து பெற்று அச்சுக்குக் கொணர்ந்து எல்லோரும் அவற்றை எளிதிற் கற்க வழி செய்த பெருந்தகையாளரும், சைவ ஆதீனங்களின் தலைவர்களால் நன்கு மதிக்கப் பெற்றவரும் நம்முத்துவிழா நாயகரைப் பாராட்டி ஏறக்குறைய அறுபதாண்டுகளுக்கு முன்னர்,

''ஆயவனூர் என்றிடினே ஆலவாய்ச் சுந்தரர்க்குத்
தூயபணி செய்குலத்தோர் தோன்றலருள் —மேயபன்னூல்
கற்றவன் பால கலிராம நாதப்பேர்
உற்றவன் தன் மார்க்கமுடையோன்''

என்னும் வெண்பாவை உரைத்தவரும், அரசினரால் '' மகா மகோபாத்யாய '' - டாக்டர் ஆகிய பட்டங்களைப் பெற்றவருமான உ. வே. சாமிநாத ஐயர், உலகப் பட்டியலில் தனி வணிக மரபில் தோன்றி முறையாகத் தமிழ்ப்பயிற்சியும் சைவ நூற்பயிற்சியும் பெற்று முத்துவிழா நாயகரின் குருநாதராகிய பழநி சிவஸ்ரீ ஈசான சிவாசாரிய சுவாமிகளிடம் சமய, விசேட. நிருவாண, தீட்சைகளுடன் சைவ சந்நியாசமும் பெற்று உலகன் பட்டியலில் '' சித்தாந்த நிலையம்'' நிறுவிப் பலருக்குச் சமய போதனைகள் செய்துவந்த இலக்குமண சுவாமிகள், தருமை ஆதீனத்தில் ஞானசிரியராக இருந்த அருணந்தி தேசிக சுவாமிகளிடத்தில் சைவ சந்யாசம் பெற்றுச் சிவாகம ஞானத்துடன் பல அரிய நூல்களை எழுதி அச்சிட்டும் சைவ சித்தாந்தத் தத்துவங்களை விளக்கும் சித்தாந்தப் படம் முதலியவற்றை எழுதி உதவியும் நமக்கு பேருபகாரம் செய்த பஞ்சாட்சபுரம் வாலையானந்த சுவாமிகள், யாழ்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலருடன் பயின்றவரும் ஆசாரியாபிஷேகம் பெற்று ஈழநாட்டிலும் பாரத நாட்டிலும் பலருக்கு சிவதீட்சை வழங்கியவரும் திருப்பரங்குன்றத்தில் மயில் மண்டபத்திற்கு அருகில் ஒரு வீடு வாங்கி அதில் சிவஞானபோத அச்சியந்திர சாலையை நிறுவி நீலகண்ட பாடியம் முதலிய பல சமய நூல்களை அச்சிட்டு வெளிப்படுத்தியவரும் ஆகிய காசிவாசி செந்திநாத ஐயர், சூரியனர் கோயில் ஆதீனத்தில் பெரும் புலவராகவும் சைவ சீலராகவும்

விளங்கியஇலக்கணம்முத்துக்குமாரத்தம்பிரான்தேவகோட்டைசிவாகமசங்கத்துச் சித்தாந்தசாத்திரபோதகாசிரியராகவும்,சிவஞானபோதம்முதலியஞானநூல்களுக்கு விளக்கவுரைஎழுதிச்சமயஉண்மைகளைவெளியிட்டவராகவும்,முத்துவிழாநாயகரின் குருநாதருக்குப்போதகாசிரியராகவும்,தம்வாழ்நாளில்பெரும்பகுதியைத் தேவகோட்டையிலேயே அமைத்துக் கொண்டவராகவும், இருந்து திருவாவடுதுறை ஆதீனவித்வானாக விளங்கிய தூத்துக்குடி பொ.முத்தைய பிள்ளை,மகிபாலன்பட்டியில் தனவணிகமரபில் தோன்றித் தமிழ் நூல்கள், சைவ நூல்கள், வடமொழி நூல்கள் ஆகியவற்றில் நல்ல பயிற்சி பெற்றுப் பல வடமொழி நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டும் தமிழ் நூல்கள் பலவற்றை எழுதியும் அரசினரால் ''மகாமகோபாத்யாய'' என்னும் பட்டம் வழங்கிச் சிறப்பிக்கப் பெற்றும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராயிருந்து ஆழ்ந்த புலமையுடைய பல புலவர்களைத் தோற்றுவித்தும் செட்டிநாட்டில் மேலைச் சிவபுரி ''கணேசர் செந்தமிழ்க் கல்லூரி'' கோனாபட்டில் ''கற்பகவிநாயக கலாசாலை'' முதலிய கல்விநிறுவனங்கள் தோன்றுவதற்குக் காரணமாயிருந்தவருமாகிய பண்டிதமணி கதிரேசஞ் செட்டியார்,வயிநாகரம் குடும்பத்தில் இளமையிலேயே வளமான கவிகள் பாடும் வாய்ப்புப் பெற்று ''மயூரகிரிக் கலம்பகம்'' முதலிய நூல்களை எழுதியவரும் தருமையாதீனத்தில் நெருங்கிய தொடர்புகொண்டு ஆதீனகர்த்தரால் ''வித்துவ சிரோன்மணி'' என்னும் பட்டம் பெற்றவரும் ஆகிய இராமநாதன் செட்டியார் முதலிய பெரும்புலவர்களுடன் மிக இளமையிலேயே நெருங்கிப் புலமைநலம் சிறக்க முத்துவிழா நாயகருக்குத் திருவருள் கூட்டியது.

1927ஆம் ஆண்டில் காஞ்சி காமகோடி பீடாதிபதி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் செட்டிநாட்டிலுள்ள ஊர்களுக்கு வந்து தங்கினார்கள்.அவர்கள் தங்கள் முத்துவிழா நாயகரின் பிறந்தஊராகிய கோனாபட்டில் அவ்வூர் பிள்ளையார்பட்டிக் கோயிலாரைச் சேர்ந்ததும், கற்பக விநாயகர் கோயில் திருக்குளத்திற்கு வடபுறம் அமைந்திருப்பதுமான அன்னதான மடத்தில் நிகழ்ந்தது.அப்போது 12 வயதே நிரம்பியிருந்த முத்துவிழா நாயகரின் வடமொழி ஒலிநயத்தை சுவாமிகள் பாராட்டி அவர்களுக்குச் ''சங்கரவிஜயம்,சுப்பிரமணிய புஜங்கம்'' முதலிய நூல்கள் பலவற்றைப் பரிசாக அளித்து வாழ்த்தினார்கள். நினைவாற்றல் மிக்க சுவாமிகள் இறுதிக் காலம் வரை செட்டிநாட்டார்களில் யாரையேனும் சந்திக்கும் சமயங்களில் எல்லாம் முத்துவிழா நாயகரைப் பற்றி விசாரிக்காமல் இருப்பதில்லை. வயிநாகரம் குடும்பத்துப்பிள்ளைகளுக்குக் கல்வி புகட்டுவதற்காக யாழ்ப்பாணத்திலிருந்து சைவப்பெரும்புலவர் சாமிநாத பண்டிதரை அழைத்துவந்து அமராவதிபுதூரில் தங்கவைத்திருந்தார்கள். மூவர்தேவாரஅடங்கல்முறை பல விளக்கக்குறிப்புகளுடன்முதல்முதலாகஅச்சிட்டு வெளிப்படுத்தியவரும்,தமிழகத்தில் பலபுலவர்களுக்கு ஆசிரியராயிருந்தவரும் பல சைவ உரைநடை நூல்கள் எழுதியவருமாகிய சுவாமிநாத பண்டிதரது மேற்பார்வையுடன் அரசாங்கக் காவல் நிலையக் கண்காணிப்பாளராக இருந்தசாம்பசிவம்பிள்ளை எழுதிய "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" இரண்டாம் பதிப்பைக் காஞ்சி மடத்தின் வெளியீடாகக் கொண்டுவர எண்ணி,அதை அச்சிட்டு வெளியிடும் பொறுப்பைக் காஞ்சி சுவாமிகள் முத்துவிழாநாயகரிடம் கொடுத்து அப்போது புதுக்கோட்டையிலிருந்த மதராஸ் ரிப்பன் அச்சு யந்திர சாலையில் அச்சிடச் செய்து வெளியிட்டு லோகோபகாரம் செய்தார்கள்.1929 ஆம் ஆண்டில் திருப்பாதிரிப் புலியூரிலுள்ள திருக்கோவலூர் ஆதீனத்தில் ஆறாவது பட்டத்தில் எழுந்தருளியிருந்து தமிழகத்தில் சைவ உண்மைகளை எவரும் விரும்பி ஏற்றுக்கொள்ளும் முறையில் விரிவுரைகளாற்றிப் புகட்டிவந்த சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள், முத்துவிழா நாயகர் பயின்றதும்,அவர்கள் தந்தையாரால் நிறுவப்பெற்றதுமான கற்பக விநாயக கலாசாலையில் சில நாட்கள் தங்கியிருந்தபோது முத்துவிழா நாயகரின் அறிவுநுணுக்கத்தை அறிந்து மகிழ்ந்து பல தமிழ் நூல்களைப் பரிசாகக் கொடுத்து வாழ்த்தினார்கள். காஞ்சிமடம்,திருக்கோவலூர் மடம் ஆகியவற்றின் தொடர்புகள் அதுமுதல் தொடங்கின.

மதுரை திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதீனத் தொடர்பு 1931ம் ஆண்டிலிருந்தும், தருமை ஆதீனத் தொடர்பு 1932ம் ஆண்டிலிருந்தும்,திருப்பனந்தாள் காசி மடாலயத் தொடர்பு 1935ம் ஆண்டிலிருந்தும் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தொடர்பு 1940ம் ஆண்டிலிருந்தும் சூரியனார் கோயில் ஆதீனத் தொடர்பு 1942ம் ஆண்டிலிருந்தும் திருவாவடுதுறை ஆதீனத் தொடர்பு 1943ம் ஆண்டிலிருந்தும் காஞ்சிபுரம் தொண்டைமண்டல ஆதீனத்தொடர்பு 1950ம் ஆண்டிலிருந்தும் நம் முத்துவிழா நாயகருக்குத் தொடர்ந்து வருகின்றன. கூனம்பட்டி மாணிக்கவாசக சுவாமிகள் ஆதீனம், திருப்புகலூர் வேளாக்குறிச்சி ஆதீனம், திருநெல்வேலி உமையொருபாகர் ஆதீனம், செப்பறைச் சுவாமிகள் ஆதீனம், தென்காசி சந்நிதி மடம் முதலிய 9 ஆதீனங்கள் பெருங்குளம் செங்கோல் ஆதீனம், மயிலம் சிவஞான பாலய சுவாமிகள் ஆதீனம், புதுச்சேரி அம்பலத்தாடிமடம், பேரூர் சாந்தலிங்கசுவாமிகள் மடம், சிரவணபுரம் கௌமாரமடம் முதலிய பல ஆதீனத் தொடர்புகளும் அவற்றின் தலைவர்கள் மதித்துப் பாராட்டிய சிறப்பும் நம் முத்துவிழா நாயகருக்கு உண்டு.

மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பண்டிதர் தேர்வில்முதலிடம் பெற்றுத் ''தங்கத் தோடா'' பரிசு வாங்கிய பெரும் புலவர் வேங்கடசாமி நாட்டார், தூத்துக்குடி சித்தாந்தப் பேராசிரியர் சிவகுருநாதபிள்ளை, பெருஞ்சொல் விளக்கனார் சரவணமுதலியார்,திருத்தொண்டர் புராண விரிவுரையாசிரியர் சிவக்கனி மணி சுப்பிரமணிய முதலியார், செந்தமிழ் நூல்கள் பலவற்றை எழுதியுதவிய மறைமலை அடிகள் முதலிய பல பெரும் புலவர்கள் தொடர்பு மிக இளமையிலேயே முத்துவிழா நாயகருக்கு வாய்த்தது.

1955 ம் ஆண்டிலிருந்து பேரூர் சாந்தலிங்கசுவாமி மடத்திலும் சிரவணபுரம் கௌமார மடத்திலும் முத்துவிழா நாயகருக்குத் தொடர்பு இருந்து வந்திருக்கிறது.

## தருமை அழைப்பு

1941 மே 21 முதல் 25 வரை திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினரால் கூட்டப்பெற்ற மெய்கண்டசாத்திர மாநாடு நெல்லை மந்திரமூர்த்தி உயர்நிலைப்பள்ளியில் நடைபெற்றது. அம்மாநாட்டிற்குத் தமிழகத்திலிருந்த சைவப்புலவர்கள் பலர் வந்து கலந்து கொண்டார்கள். திருவுந்தியார் முதல் சங்கற்பநிராகரணம் வரை உள்ள 14 மெய்கண்ட நூல்களையும் தக்கவர்கள் பலரைக் கொண்டு விரிவுரையாற்ற ஏற்பாடு செய்யப் பெற்றிருந்தது. அதனோடு அவர்களது விரிவுரைகளைக் கட்டுரைகளாக எழுதி வாங்கி வெளியிட ஏற்பாடு செய்திருந்தார்கள் இந்த மாநாட்டில் நம் முத்துவிழா நாயகரின் விரிவுரைக்கு அமைந்தது வினாவெண்பா என்னும் ஞானநூல். இந்த நூலைப் பற்றி இன்னும் இருவரும் விரிவுரையாற்றினார்கள். இவ்வாறு அமைந்த விரிவுரைக் கட்டுரைகளில் 14 சாத்திரங்களிலும் சிறந்த ஒவ்வொன்றைத் தேர்ந்தெடுத்து அவற்றை எழுதிய பதினால்வருக்கும் பரிசாகக் கொடுக்கும்படி ஒரு தொகையை அப்போது தருமை ஆதீனத் தலைவராக இருந்த ஸ்ரீ சண்முகத் தேசிகர் கழகத்துக்கு அனுப்பியிருந்தார்கள். அவர்கள் குறிப்பின்படி 14 சாத்திரங்களிலும் வந்த கட்டுரைகளைத் தக்க தேர்வாளர்களைக் கொண்டு தேர்ந்தெடுத்த போது வினாவெண்பாவுக்கு முத்துவிழா நாயகரின் கட்டுரையே தேர்ச்சி பெற்று முன்னிலையில் இருந்தது. அதனால் தருமை ஆதீன வினாவெண்பாக் கட்டுரைப்பரிசிற்கு முத்துவிழா நாயகரே உரியவரானார்கள். இந்த நிகழ்ச்சிக்குச் சில ஆண்டுகளுக்கு முன்பே தருமையாதீனத்தைச்சேர்ந்த திருச்சிராப்பள்ளி மௌன சுவாமிகள் மடம் கட்டளைத் தம்பிரானாகவும், சிறந்த சாத்திரப் பயிற்சி உயர்ந்த பேச்சுவன்மை உடையவராகவும், விளங்கிய சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளுடன் முத்துவிழா நாயகருக்கு நெருங்கிய தொடர்பு

இருந்ததால் அவர்கள் மூலமாக தருமை ஆதீன கர்த்தர் முத்துவிழா நாயகரை அழைத்து விரிவுரையாற்றச் செய்து பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார்கள். அதன் பின்னர் 30-8-41ல் நடந்த மெய்கண்டான் சித்தாந்த மாநாடு திருமுறைவிழா முதலிய தருமை ஆதீன விழாக்கள் அனைத்திலும் முத்துவிழா நாயகர் கலந்துகொள்ளும் வாய்ப்பு வாய்த்தது.திருவாடானை ஐயாமணிக்குருக்கள் திருச்சுழி கற்பூர சுந்தர பட்டர், காஞ்சீபுரம் புண்யகோடி சோமசுந்தரக் குருக்கள், மதுராந்தகம் சுப்பிரமணியக்குருக்கள், கீழ்வேலூர் சுப்பிரமணியக்குருக்கள், மாயூரம் வைத்தியநாதக் குருக்கள், திருவாவடுதுறை சாமிநாதக் குருக்கள், தருமபுரம் சாமிநாதக்குருக்கள், விருத்தாச்சலம் சாம்பமூர்த்திக் குருக்கள் ஆகியோர் முத்துவிழா நாயகருடன் சிவாகமக்கிரியாநெறி ஞானநெறிகள் பற்றிக் கலந்து பேசி மகிழ்வார்கள் இசையரசு தண்டபாணி தேசிகர் திருநெல்வேலி சுந்தர ஒதுவாமூர்த்தி குரங்காடுதுறை சொக்கலிங்கதேசிகர் வேதாரண்யம் அடங்கல்முறை அருணாசல தேசிகர் முதலிய திருமுறை வாணர்கள் முத்துவிழா நாயகருடன் கலந்து பேசித் திருமுறை உண்மைகளை உள்ளங்கொண்டு இன்புறுவார்கள்.

### தேர்வாளர்

புதுக்கோட்டைத் தனியரசு தமிழ்பாதுகாப்பில் பெரிதும் கவனம் செலுத்தி வந்தது. அதனோடு வடமொழியையும் கண்ணாக மதித்துப் போற்றியது. தமிழிலும், வடமொழியிலும் பாடத்திட்டங்களை ஏற்படுத்தி அவற்றிற்குத் தேர்வு வைத்து வெற்றி பெற்றவர்களுக்கு ஆண்டுதோறும் விஜயதசமி நாளில் மன்னர் அவர்களை நேரில் அழைத்துப் பண்டித பட்டத்துடன் பரிசும் வழங்கி வந்தார்.1940ம் ஆண்டில் தமிழ்ப்பண்டிதர் தேர்வுக் குழுத் தலைவராக முத்துவிழா நாயகரை அரசாங்கம் நியமித்தது. அப்பதவியில் தனியரசு பாரதப் பொது அரசுடன் இணையும்வரை இருந்தார்கள்.

### பெண் மகப் பேறு

1946 ஆம் ஆண்டு பங்குனிச் சுவாதிநாள் காரைக்காலம்மையார் திருநட்சத்திரத்தில் முத்துவிழா நாயகரின் தலைமகள் மீனாட்சி பிறந்தாள்.

### கந்தர் சஷ்டி விழாக் கழகம்

சோழ நாட்டில் தேவாரத் திருப்பதிகம் பெற்ற திருத்தலங்கள் பலவற்றுள் நாகபட்டினத்தை அடுத்த திருச்சிக்கலும் ஒன்று. இத்தலத்துத் திருக்கோயில் திருப்பணி ஆத்திக்காடு தெக்கூர் கருமுத்து விலாசக் குடும்பத்தாரால் செய்யப்பெற்று அந்தக்குடும்பத்தில் கல்விச் செல்வம் பொருட்செல்வம் முதலியவற்றால் சிறந்து விளங்கிய அழகப்பசெட்டியார் அவர்களின் தரும பரிபாலனத்தில் பல ஆண்டுகள் இருந்து வந்தது. அங்குள்ள சிங்காரவடிவேலருக்கு ஆண்டுதோறும் சஷ்டி விழா சிறப்பாக நடைபெறும்.அத்திருக்கோயிலின் முன்பக்கத்தில் கலையரங்கம் ஒன்றை அமைத்து அதில் விழா நாட்களில் சமய விரிவுரைகள் இசை நாட்டிய அரங்குகள் சிறப்பாக நடத்தினார்கள். அந்த நிகழ்ச்சிகளில் கலந்து பயன்பெறத் தேவகோட்டையில் நல்ல சங்கீத ரசிகராயிருந்த வெ.மு.சோம.ராமநாதன் செட்டியார் இசைப்புலவராயிருந்த கரு.காசிச் செட்டியார்(சங்கீதம்.கா)ஆகிய இருவரும் தவறாது சென்று வருவார்கள்.1945 ஆம் ஆண்டுக் கந்தர் சஷ்டி விழாவில் முத்து விழா நாயகர் விரிவுரை அரியக்குடி சங்கீத ரத்னாகரம் ராமானுஜ ஐயங்கார் இசையரங்கு சென்னை காயனபடு கீர்த்தனபடு சரஸ்வதி பாய் கதாபாலட்சேபம் ஆகிய மூன்றும் சிக்கல் திருக்கோயில் கலையரங்கில் ஒரே நாளில் நிகழ்ந்தன. அப்போது ராமநாதன் கெட்டியார் காசிச்செட்டியார்

ஆகிய இருவரும் சிக்கலில் நடப்பதுபோல தேவகோட்டை கந்தர்சஷ்டிவிழாவிலும் ஆண்டுதோறும் முத்தமிழரங்கம் நிகழ ஏற்பாடு செய்யவேண்டுமென்று முத்துவிழா நாயகரிடம் கேட்டுக்கொண்டதுடன் பின்னர் தேவகோட்டைக்கு வந்து கு.கரு.வெ.ராமநாதன் செட்டியார் உ.மு.அ.இலக்குமணன் செட்டியார் ஆகியவர்களுடன் பாலறாவாயர் நிலையத்திற்கு வந்து தேவகோட்டையில் கந்தர் சஷ்டி விழாக்கழகம் நிறுவிச் செயற்படவேண்டிய முறைபற்றியும் கலையரங்கத்தை நகரச் சிவன்கோயிலுக்கு முன்பு உள்ள வெளியிடத்திற்கு முருகவேள் சதுக்கம் என்று பெயர்சூட்டி அந்தஇடத்தில் அலங்காரப் பந்தர் அமைத்து அதில் நடத்துவதென்றும் கந்தர் சஷ்டி விழாபிரதமையில் தொடங்குமாதலால் அதற்கு முந்திய அமாவாசை நாளிலேயே ஆண்டுதோறும் நிகழ்ச்சியைத் தொடங்குவதென்றும் தொடக்கநாளில் ஒரு விரிவுரை ஒரு இசையரங்கமும் அடுத்த 4 நாட்களில் விரிவுரைகளும் அடுத்த 4 நாட்களில் இசை நாட்டிய நிகழ்ச்சிகளும் நடத்துவதென்றும் முடிவு செய்தார்கள். வடமொழியிலக்கண மரபுப்படி கந்த சஷ்டி என்றும் தமிழிலக்கண மரபுப்படி கந்தர் சஷ்டி என்றும் அமைவதை முத்துவிழா நாயகர் எடுத்துக் கூற அதை ஏற்றுக் கழகத்திற்குக் கந்தர் சஷ்டி விழாக் கழகம் எனறே பெயர் சூட்டப்பெற்றது.1946 ஆம் ஆண்டில் கழகம் தோன்றிச் செயற்படத் தொடங்கியது.தொடக்கத்திலிருந்து ஏறக்குறைய 15 ஆண்டுகள் வரை முத்துவிழா நாயகரே கழகத் தலைவராகஇருந்து வந்தார்கள். தமிழகத்திலுள்ள பல புலவர்களையும் விழாவுக்கு அழைத்துத் தங்கள் வீட்டில் தங்கவைத்து உபசரித்தார்கள். அப்போது இசைப்புலவர்களைத் தங்கள் வீட்டில் தங்கவைத்து உபசரித்தவர் உ.மு.அ. இலக்குமணன் செட்டியார். பின்னர் கந்தர் சஷ்டி விழாக் கழகத்திற்காகக் கட்டிடம் ஒன்று வாங்கப்பெற்று அக்கட்டிடத்திலேயே இயல் இசை நாட்டிய அறிஞர்கள் தங்கவைத்து உபசரிக்கப் பெறுகிறார்கள்.

**சேக்கிழார் திருநாட்கழகம்**

மகாவித்வான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களின் மாணவர் பலருள் இளமையில் அம்மைநோயால் இரண்டு கண்களும் பழுதடைந்தநிலையிலும் கூடக் கேள்வி ஞானத்தினாலேயே பெரும்புலவராக விளங்கியவர் தேவகோட்டை நாராயணச் செட்டியார் என்னும் வன்றொண்டச் செட்டியாரும் ஒருவர்.இவரது சைவப்பற்றும் நினைவாற்றலும் அந்தநாளில் அனைவராலும் மதிக்கப்பெற்றவை.திருவாவடுதுறை ஆதீனத்தில் 16வது குருமூர்த்திகளாக விளங்கிய மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் இவரது அழுத்தமான சைவப்பற்றைப் பாராட்டி இவருக்கு இட்டபெயர் வன்றொண்டர் என்பது, இவரே மகாவித்துவான் பிள்ளையவர்களைத் தேவகோட்டைக்கு அழைத்துவந்து சேக்கிழார் பிள்ளைத் தமிழ் பாடச் செய்தவர். சேக்கிழார் பெருமானிடம் இவர் கொண்டிருந்த ஈடுபாட்டினால் அப்பெருமானுக்குத் தேவகோட்டையில் ஒரு திருக்கோயில் கட்டிப் பூசை நிகழ ஏற்பாடு செய்ய எண்ணித் தனது பொருள் வசதிக்கேற்ப ஒரு இடத்தை விலைக்கு வாங்கி அதில் திருக்கோயில் அமைக்கத் திட்டம் செய்தார் அப்போது தேவகோட்டை நகரத்தார்கள் அனைவரும் ஒன்றுகூடி அதுவரை தேவகோட்டைக்கென்று தனிச்சிவாலயம் இல்லாதபடியால் சிவன்கோயில் அமைக்க முடிவு செய்து வன்றொண்டர் சேக்கிழார் கோயிலுக்கென வாங்கிய இடத்தைச் சிவன்கோயிலுக்குத் தரவேண்டுமெனவும் அதற்குரிய விலையைத் தந்து விடுவதாகவும் கேட்டுக் கொண்டார்கள்.வன்றொண்டர் கோயிலுக்கென வாங்கிய இடத்தை விலைக்குக் கொடுக்கமுடியாது என்றும் அந்த இடத்தில் சிவன்கோயில் அமைக்க நகரத்தார்கள் முன் வந்திருப்பது மகிழ்ச்சிக்குரியதென்னும் அமைக்க இருக்கும் சிவன்கோயிலில் தனிக்கருவறையுடன் சேக்கிழாருக்கு ஒரு தனிக்கோயில்அமைக்கவேண்டுமென்றும் நாள்தோறும் பரிவாரமூர்த்திகளுக்குப் போலல்லாமல் மூலஸ்தான மூர்த்திகளுக்குப் போல

எல்லாக் கால பூசைகளும் சேக்கிழாருக்கு நடைபெறவேண்டுமென்றும் கேட்டுக்கொள்ள அதற்கிசைந்த நகரத்தவர்களின் விருப்பப்படி அந்த இடத்தைச் சிவன்கோயில் அமைக்கக்கொடுத்தார்.தேவகோட்டை நகரச் சிவன்கோயிலில் பூசைவேளைகளில் ஒலித்துக்கொண்டிருக்கும் பெரிய மணியில் சேக்கிழார் திருக்கோயில் என்று எழுதப்பெற்றிருப்பது இந்தமணி சேக்கிழார் கோயிலுக்காக வாங்கப் பெற்றுச் சிவன்கோயிலுக்குவழங்கப்பெற்றது என்பதை அறிவித்துக் கொண்டிருக்கிறது.இச்சிறப்பைக்கருதி இத் திருக்கோயிலில் ஆண்டுதோறும் வைகாசிப் பூசநாளில் சேக்கிழாருக்கு விழா நடத்தவேண்டுமென்று முத்துவிழா நாயகர் எண்ணினார்கள்.அவர்களுடன் பெருநட்புக்கொண்டும் சைவத் தொண்டில் மிகுதியான ஈடுபாடுகொண்டும் இருந்த பெருஞ்செல்வர் சுப.சேவு.மெ.மெய்யப்ப செட்டியாரிடம் இந்தக் கருத்தைத் தெரிவித்தபோது அவர்கள் அதை ஏற்று இன்னும் சைவப் பேரன்பர்களாயிருக்கிற நகரத்தார்களின் கூட்டுறவுடன் விழாவை 1947ம் ஆண்டில் தொடங்குவதற்கு முன்னின்று உதவினார்கள்.விழாவில் திருக்கோயிலிலுள்ள எல்லா மூர்த்திகளுக்கும் விசேட அபிடேக ஆராதனைகளும் திருமுறைகளுடன் சேக்கிழார் பெருமான் திருவீதியுலாவும் சைவப் பெரும்புலவர்கள் பலரது விரிவுரைகளும் நிகழ்ந்து வந்தன.

### ஆன்மீகப் பேறு

1949ம் ஆண்டு முத்துவிழா நாயகரின் குடும்பக் குலதெய்வமாகிய சொக்கலிங்கப் பெருமானுக்குரிய மூல நாளில் முத்துவிழா நாயகரின் தலைமகன் சொக்கலிங்கம் பிறந்தான்.

### செட்டிநாடு வார இதழ்

காரைக்குடியில் செட்டிநாடு என்னும் பெயருடன் ஒரு வார இதழ் நகரத்தார்களின் முன்னேற்றம் மொழி வளர்ச்சி சமய வளர்ச்சி ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு வெளியிடப் பெற்று வந்தது. அந்நிறுவனத்தை முத்துவிழா நாயகர் 1950 ம் ஆண்டில் விலைக்கு வாங்கி அவ்விதழில் இலக்கியக் கட்டுரைகள் பலவற்றையும் பதினெண்கீழ்கணக்கு நூல்களில் ஒன்றாகிய நற்றிணைப் பாடல்கள் நானூறுக்கும் தெளிவுரையையும் எழுதி வெளியிட்டார்கள்.

### சிவஸ்ரீ ஈசான சுவாமிகள் சீடர்கள் சங்கம்

தேவகோட்டையிலும் செட்டிநாட்டைச் சேர்ந்த பிற ஊர்களிலும் சிவஸ்ரீ ஈசான சிவாச்சாரிய சுவாமிகளிடம் சிவதீட்சை பெற்றுக்கொண்ட அன்பர்கள் பலர் இருந்தார்கள் 1955ம் ஆண்டில் அவர்களில் ஏறக்குறைய 80 அன்பர்கள் தேவகோட்டைவாசிகள். அவர்களும் பிற ஊர் அன்பர்களும் வாரத்திற்கு ஒருமுறை ஒன்று கூடிச் சமய உண்மைகளைச் சிந்திப்பதற்கு வாய்ப்பாக ஒரு சங்கம் நிறுவப்பெற்று அச் சங்கத்திற்கு சுப.சேவு.மெய்யப்பச் செட்டியார் தலைவராகவும் திருகாளத்தித் திருப்பணிச் செல்வர் ராமநாதன் செட்டியார் புதல்வர் கண்ணப்ப செட்டியார் செயலாளராகவும் இருந்தார்கள். சங்கத்திற்கென ஒரு கட்டிடம் வாங்குவதற்கும் ஏற்பாடு செய்யப்பெற்றது. வாரந்தோறும் முத்துவிழா நாயகரால் சாத்திர பாட வகுப்பு நடத்தப்பெற்றது.வகுப்பில் உள்ளூர் வெளியூர் அன்பர்கள் பலர் கலந்து பயன்பெற்றார்கள்.

### சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கம்

தேவகோட்டையில் வேத சிவாகம நெறிமுறை விளங்குதற்கென 1916ம் ஆண்டில் சத்திரம் சோமசுந்தரம் செட்டியார், பெரிய மைனர் ராமநாதன் செட்டியார் ஜமீன்தார் அருணாசலம்

செட்டியார், திருப்புனவாசல் சுப்பிரமணியன் செட்டியார் முதலிய செல்வர்கள் கூடிப்பேசி சிவாகமசித்தாந்த பரிபாலன சங்கத்தைத் தொடங்கினார்கள். அச்சங்கத்தில் வடமொழி தென்மொழிச் சாததிரப் பயிற்சிக்கென ஆசிரியர்கள் நியமிக்கப் பெற்றும் பல இடங்களில் இருந்த சிவாகமச் சுவடிகள் சாத்திரச் சுவடிகளை அரிதில் முயன்று பெற்று அச்சிட்டும் செய்தற்கரிய அரிய பணிகள் பல செய்யப் பெற்றன. சங்க ஆசிரியருள் தூத்துக்குடி முத்தையாபிள்ளையும் காளையார் கோவில் காளீசுவரக்குருக்களும் மாணவருள் சிவஸ்ரீ ஈசான சிவாசாரிய சுவாமிகளும் நினைவிலிருக்கத் தக்கவர்கள். 1950 ம் ஆண்டுவரை சங்கம் தொடர்ந்து பணி செய்து வந்தது. அதன் பின்னர் சங்கத்துக்கு ஏற்பட்ட பொருளாதார நலிவினால் சங்கத்தின் செயல்முறைகள் ஒடுங்கிவிட்டன. சங்கத்தின் செயல்முறைப் பொறுப்பைக் கடைசியாக வைத்திருந்த திருப்புனவாசல் சுப்பிரமணியன் செட்டியார் புதல்வரும் சுதந்திரப் போராட்ட சீரருமாகிய திருநாவுக்கரசு செட்டியார் முத்துவிழா நாயகரிடம் வந்து சங்கப் பொறுப்பை ஏற்று இயன்ற பணியைச் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். அதன்படி சங்கத்தில் வியாழக்கிழமைதோறும் சாத்திர பாட வகுப்பும் சிற்சில நூல் வெளியீடுகளும் அன்பர்களுடன் தல யாத்திரைகளும் முத்துவிழா நாயகரால் நிகழ்ந்தன.

### விரிவுரையாளர்

முத்துவிழா நாயகரின் வாழ்க்கையில் சமய சாத்திர இலக்கிய விரிவுரைகள் பெரும்பங்கு பெறுவன. தமிழகத்தில் இந்த நூற்றாண்டில் நடைபெற்ற எல்லா விரிவுரையரங்குகளிலும் இவர்கள் பங்கு நிலையாக இருந்து வந்திருக்கிறது. இவர்கள் தலைமை தாங்கிய விழாக்களும் பலகல்விச் சாலைகள் சபைகள் முதலியவற்றில் இலக்கிய வகுப்புகளும் சமய சாத்திர வகுப்புகளும் நடத்தி உள்ளார்கள். இப்போதும் பல இடங்களில் வகுப்புகள் நடந்து கொண்டிருக்கின்றன.

### இசைத் தொண்டு

இயற்றமிழ் பாடல்களை மரபு வழுவாது விரைந்து பாடும் ஆற்றலுடைய முத்துவிழா நாயகர் இசைப்பாடல்களை இயற்றுவதிலும் வல்லவர். திருப்புகழ் சந்தத்தில் அமைந்த பல இசைப்பாடல்கள் இவர்களால் இயற்றப்பெற்றுள்ளன. தமிழிசை இயக்கத் தந்தையாக விளங்கிய செட்டிநாட்டரசர் விருப்பத்தை ஏற்று இவர்கள் பாடிய 75 தமிழிசைப் பாடல்கள் திருப்பாம்புரம் சாமிநாத பிள்ளையால் ஸ்வரப் படுத்தப்பெற்று அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் அச்சிட்டு வெளியிடப் பெற்று இருக்கிறது.

தேவகோட்டை தமிழிசைப் பள்ளித் தொடக்க காலத்திலிருந்து பல ஆண்டுகள் தலைவராகவும் ஆலோசகராகவும் இருந்து அதன் வளர்ச்சிக்குத் துணை செய்தார்கள்.

### சிவதீட்சைப் பேறு

1929ம் ஆண்டுச் சிவராத்திரி நாளில் சமய தீட்சையும் திருமுறைப்பூசையும் பெற்றுச் சைவநெறியைக் கடைப்பிடித்துவந்த முத்துவிழா நாயகர் 1947ம் ஆண்டுச் சிவராத்திரி நாளில் நிருவாண தீட்சையும் உடையவர் பூசையும் பெற்றுக் கொண்டார்கள். இவர்களது தீட்சா குருவாக விளங்கியவர்கள் பழநி சிவஸ்ரீ ஈசான சிவாசாரிய சுவாமிகள், விசேட தீட்சை பெற்றுத் திருமுறைப்பூசை எழுந்தருளச் செய்துகொண்டது முதல் ஆண்டுதோறும் சித்திரை முதல் நாளில் தொடங்கி நாளுக்கு 50 பாடல்கள் வீதம் பாராயணம் செய்து பன்னிரு திருமுறைகளையும் பங்குனி இறுதியில் நிறைவு செய்தும், மெய்கண்ட நூல்களை ஆண்டுக்கு

4 முறை பாராயணம் செய்தும் வருவது இவர்கள் வழக்கம். நிருவாண தீட்சை இவர்கள் குடும்பத்தினருக்குச் சொந்தமான மதுரை அன்னை சந்நிதி 63வர் குருபூசை மடத்தில் சிவ ஈசான சிவாசாரிய சுவாமிகளால் செய்து வைக்கப் பெற்றது. தீட்சைக்காக அங்கு ஆறுகால வேள்வியும் பூசையும் நிகழ்ந்தன அப்போது பல அன்பர்கள் சமய விசேட தீட்சைகள் பெற்றார்கள். முத்துவிழா நாயகர் மனைவியார் திருமதி மீனாட்சி ஆச்சி விசேட தீட்சை சிவ ஸ்ரீ பூஜை எழுந்தருளச் செய்து கொண்டார்கள். மலேஷியாவிலுள்ள சிரம்பான் என்னும் ஊரில் ஆவினிப்பட்டி அ.பழ.பழநியப்ப செட்டியார் அருள்நெறித் திருக்கூட்டத் தலைவராயிருந்து தொண்டு செய்து வந்தார்கள்.அவர்கள் முத்துவிழா நாயகரை மலேஷியாவிற்கு வந்து சில விரிவுரைகள் ஆற்றவேண்டுமென்று வேண்டிப் பயணத்துக்குரிய ஏற்பாடுகளைச் செய்தார்கள்.அப்போது பல ஆண்டுகளாக மலேஷியாவில் தங்கியிருந்து சமய நெறியில் உறைப்புடன் வாழ்ந்த பெருமக்கள் பலர் கோலாலம்பூர் கந்தசாமி கோயிலில் கூடிச் சிவதீட்சை செய்து வைக்கத் தக்க ஆசாரியர் அங்கு இல்லாததால் அந்தக் குறையைப் போக்கி அங்கே வசிக்கும் பலருக்குச் சிவதீட்சை செய்து வைப்பதற்காக ஆசாரிய அபிஷேகத்தையும் பெற்றுக்கொண்டு வரவேண்டுமென்று முத்துவிழா நாயகருக்கு ஒரு விண்ணப்பக் கடிதம் அனுப்பினார்கள்.அதற்கு முன்னேயே இந்தியாவில் பலர் அம்மாதிரி விண்ணப்பத்தை முத்துவிழா நாயகரிடம் செய்திருந்தும்,இந்த விண்ணப்பம் மறுக்க முடியாததும் இன்றியமையாததும் ஆகிவிட்டபடியால் முத்துவிழா நாயகர் 1960 ம் ஆண்டில் குருமூர்த்திகளிடம் ஆசாரிய அபிஷேகம் பெற்றுக் கொள்ள நேர்ந்தது.அதன்பிறகு முத்துவிழா நாயகரிடம் இருவர் ஆசாரிய அபிஷேகமும் 24வர் சாதகாபிஷேகமும் 114பேர் நிருவாண தீட்சையும் 474 பேர் விசேட தீட்சையும் 2838 பேர் சமய தீட்சையும் பெற்றுள்ளார்கள். பல திருக்கோயில்களில் குடமுழுக்கு விழாக்களையும் பலருக்குத் திருமணம்,மணிவிழா முதலியவற்றையும் நேராகவும் சிவாசாரியர்களைக் கெண்டும் முத்துவிழா நாயகர் செய்து வருகிறார்கள்.

### மக்கள் திருமணம்

1962ல் முத்துவிழா நாயகரின் மகள் மீனாட்சிக்கும் தேவகோட்டை பழ.அழகப்பச் செட்டியார் மகன் அழகப்பனுக்கும் திருமணம் நிகழ்ந்தது. திருமணத்தை சிவஸ்ரீஈசான சிவாசாரிய சுவாமிகள் வந்திருந்து சிவாகம நெறிப்படி நடத்தி வைத்தார்கள்.1969ல் முத்துவிழா நாயகரின் மகன் சொக்கலிங்கத்துக்கும் தேவகோட்டை வீர.ராம.ராம.ராமநாதன் செட்டியார் மகள் விசாலாட்சிக்கும் சிவாகம விதிப்படி திருமணம் நடைபெற்றது.

### வெளிநாட்டுப் பயணங்கள்

1960ம் ஆண்டு மாசித் திங்களில் முத்துவிழா நாயகர் மலேஷியா பயணத்தை மேற்கொண்டார்கள். மலேஷிய நாட்டு அன்பர்கள் குறிப்பின்படி அந்த நாட்டில் பல விரிவுரைகளும் தீட்சைகளும் சாத்திர பாட வகுப்புகளும் நடைபெற்றன மலேஷியாவிலிருந்து வியட்நாமைச் சேர்ந்த செய்கோன் நகரத்தார்களின் அழைப்பை ஏற்று அங்கே சென்று சொற்பொழிவுகள் தீட்சை முதலியவை நடத்தினார்கள். அங்கிருந்து கம்போடிய நாட்டிலுள்ள அங்கோர்வாட் நகரத்துக்குச் சென்று ஏறக்குறைய 2000 ஆண்டுகளுக்கு முன்னர் சோழ மன்னர் ஒருவரால் கட்டப் பெற்றதும் அளவால் மிகப் பெரியதுமான சிவன் கோயிலைத் தரிசித்து அங்கிருந்து தாய்லாந்து நாட்டிற்குச் சென்று அங்குள்ள மரகதப் புத்தர் கோயில் முதலியவற்றின் சிறப்புகளைப் பார்த்து, அந்த நாடுகளில் வசித்த தமிழன்பர்களால் மகிழ்ச்சியுடன் வரவேற்று உபசரிக்கப் பெற்று மீண்டும் மலேஷியா வந்து 1960 கார்த்திகைத் திங்களில் தாய் நாட்டுக்குத்

திரும்பினார்கள். வெளிநாடுகளில் இவர்கள் செய்த சமயப் பணியைப் பாராட்டிச் சைவ ஆதினங்களும் சைவ மன்றங்களும் இவர்களுக்குச் சிறப்பாகப் பாராட்டு வழங்கினார்கள். மீண்டும் 1960ல் மலேஷிய அன்பர்கள் அழைப்பை ஏற்று 4 மாதங்கள் தங்கி முன்பு போலவே தீட்சைகளும் சொற்பொழிவுகளும் சாத்திர வகுப்புகளும் நடத்தித் தாயகத்துக்குத் திரும்பினார்கள்.

1962 தைப்பூச விழாவில் பேசவேண்டுமென்று விரும்பிய ரங்கூன் நகரத்தார்களின் அழைப்பை ஏற்றுப் பர்மா பயணத்தை மேற்கொண்டார்கள்.பர்மாவில் பல இடங்களில் தீட்சைகள் பாட வகுப்புகள் விரிவுரைகள் நிகழ்ந்தன. அப்போது காசியிலுள்ள நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம் ரங்கூன் நகரத்தார் மேற்பார்வையில் இருந்து வந்தது. அச்சத்திர நிர்வாகத்தினர் பர்மாவிலிருந்து திரும்பும்போது காசி முதலாக வடநாட்டு யாத்திரையை முத்துவிழா நாயகர் மேற்கொள்ளுவதற்குரிய பொருட்செலவு வசதி ஆகியவற்றைக் கவனித்துக் கொள்ள காசிச் சத்திர மேலாளருக்குக் கடிதம் அனுப்பி முத்துவிழா நாயகரின் வடநாட்டு யாத்திரைப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்கள். காசியில் தங்கியிருந்தபோது விசுவநாதப் பெருமானுக்கு ஒருநாள் உச்சிக்கால பூஜை அங்கு பூஜகராக அருந்த பண்டா உடனிருந்து உதவி செய்யச் சிவாகம விதிப்படி முத்துவிழா நாயகரால் செய்யப்பெற்றது.யாழ்ப்பாணம் சைவ பரிபாலன சபையார் 1968ல் நிகழ்ந்த அச்சபையின் ஆண்டுவிழாத் தலைமையேற்க முத்தவிழா நாயகரை அழைத்தார்கள். அதை ஏற்றுத் தலைமை தாங்கியும் யாழ்ப்பாணம் நாவலரவர்களால் நிறுவப்பெற்ற சைவப்பிரகாச வித்யாசாலையில் சிவஞான சித்தியார் வகுப்பு நடத்தியும் ஈழ நாட்டில் ஆண்டிலும் அனுபவத்திலும் மிகுந்த பல புலவர்களும் பேராசிரியர்களும் கலந்து பயன்பெற்றது குறிப்பிடத்தக்கது.

### பட்டங்கள்

முத்துவிழா நாயகரின் இடையீடில்லாத சமயத் தொண்டைப் பாராட்டும் முறையில் சைவ ஆதினங்களும் சமய நிறுவனங்களும் அவர்களுக்குப் பல பட்டங்களை வழங்கிச் சிறப்பித்திருக்கிறார்கள். மிக இளமையிலேயே சொற்பொருட் செறிவுள்ளவையும் யாப்பிலக்கண அமைதி வழுவாதவையுமான பாடல்களை விரைந்து இயற்றும் ஆற்றலைப் பாராட்டி ஆத்தன் குடி சநாதன தர்ம மகாச்சபையார் காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் குறிப்பின்படி பாலகவி என்னும் பட்டத்தை வழங்கிச் சிறப்பித்தார்கள். இந்தப் பட்டம் இவர்களுக்கு இளமையிலேயே வந்துவிட்டபடியால் இவர்களின் இயற்பெயரைக்கூட மறைந்து உலகறிந்த ஒருபெயராக இது ஆகிவிட்டது.1943 ம் ஆண்டில் தருமபுர ஆதினத்தில் நடைபெற்ற ஆவணி மூலத்திருமுறைத் திருநாளில் ஆதின கர்த்தர் ஸ்ரீசண்முக தேசிகர் சொக்கலிங்க மூர்த்தி பூஜைமடத்தில் முத்துவிழா நாயகருக்கு இண்டை சாத்தித் திருநீறு அளித்துப் பொன்னாடை போர்த்தி ஆதீன வித்துவான் என்னும் பட்டம் பொறித்த பொற்பதக்கத்தை வழங்கினார்கள். அப்போது

காவியங் கயற்க் ணம்மை காதல் செய் சொக்கநாதன்
ஆவணி மூல நாளில் அடியனேற் கருள லாகத்
தாவில் சீர்த் தருமை மேய சண்முக சாமி எற்குக்
கோவியல் வித்து வான்பேர் கொடுத்தன்ன்
குளிர்ந்தேன் மன்னோ.

என்னும் பாடலை முத்துவிழா நாயகர் கூறினார்கள்.

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தில் எழுந்தருளியிருந்த ஆறுமுக தேசிக சுவாமிகள் ஆதீனக் குருபூஜை விழாவில் விரிவுரையரசு என்னும் பட்டத்தையும்

அருணாசல தேசிக சுவாமிகள் (குன்றக்குடி அடிகளார்) பெரும்புலவர் என்னும் பட்டத்தையும் வழங்கினார்கள்.

மதுரை திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதீனத்தில் 291ம் பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீ சோமசுந்தர தேசிக சுவாமிகள் சித்தாந்த சைவ வித்தகர் என்னும் பட்டத்தை வழங்கினார்கள்.

தூத்துக்குடியில் 100 ஆண்டுகளுக்கு மேலாகச் சமயப்பணி செய்துவரும் சைவ சித்தாந்த சபையாரால் ''சித்தாந்தப் புலவர் மாமணி'' என்னும் பட்டம் வழங்கப் பெற்றது. உறையூர் வாகீச பக்த ஜன சபையார் ''சித்தாந்த சைவ ஞாயிறு'' என்னும் பட்டம் வழங்கினார்கள். சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் சைவநெறிக் கழகத்தார் ''சைவ சித்தாந்த சரபம்'' என்னும் பட்டம் வழங்கிச் சிறப்பித்தார்கள். திருச்சிராப்பள்ளித் தமிழ்ச் சங்கத்தார் ஆண்டுதோறும் தமிழ்ப் புலவர்களில் தக்கவர்களைத் தேர்ந்தெடுத்து மகாவித்துவான் பிள்ளையவர்களின் நினைவாகப் பரிசு வழங்கி வருகிறார்கள். அந்தப் பரிசு 1988ம் ஆண்டில் முத்துவிழா நாயகருக்கு வழங்கப் பெற்றது.

மதுரை சரஸ்வதி நாராயணன் கல்லூரியில் சரஸ்வதி நாராயணன் அறக்கட்டளைச் சார்பில் தமிழகத்துப் புலவர்களில் தக்க ஒருவரைத் தேர்ந்து தரும் பரிசுத் திட்டம் ஒன்றை அமைத்திருக்கிறார்கள. அந்தப் பரிசுத் தொகையும் ''தமிழியல் அறிஞர்'' என்னும் பட்டமும் சென்னை மாநில ஆளுநரால் வழங்கப் பெற்றது.

### அஸ்திராபிஷேகங்களும் மணிவிழா பவளவிழாவும்

முத்துவிழாவும் நாயகரின் 59ம் ஆண்டு நிறைவு மார்கழிச் சுவாதியிலும் 61ம் ஆண்டு நிறைவு மார்கழிச் சுவாதியிலும் முறையே மதுரை 63வர் குருபூசை மடத்திலும் பிள்ளையார்பட்டித் திருத்தலத்திலும் சில வேள்வி கலச பூசை அபிஷேகம் முதலியவைகளுடன் சிறப்பாக நடைபெற்றன1975ம் ஆண்டு மார்கழிச் சுவாதியில் 60ம் ஆண்டு நிறைவு மணிவிழா பாலறாவாயர் நிலையத்தில் சிவ வேள்வி கலசபூஜை அபிஷேகம் ஆகியவற்றுடனும் பல புலவர்களின் பாராட்டு, சைவ ஆதீனங்கள் திருக்கோயில்களின் பிரசாதப் பேறு, புதுக்கோட்டை ராமநாதபுரம் சிவகங்கை மன்னர்களின் மரியாதைகளுடனும் முத்துவிழா நாயகரின் அருட்கொலுவுடனும் இனிதாக நடைபெற்றது.

1989 மார்கழிச் சுவாதியில் முத்துவிழா நாயகரின் சகஸ்ரஜன்ம நட்சத்திரபூர்த்திப் பவள விழா பாலறாவாயர் நிலையத்தில் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

### பேரன் பேத்தியர்

1968ல் பிறந்த மகள் வழி மூத்த பேத்தி ஞானப் பூங்கோதைக்கும் பெரி.முத்தைய்யா செட்டியார் மகன் காசிநாதனுக்கும் 1986லும் 1970ல் பிறந்த மகன் வழிப் பேத்தி மீனாட்சிக்கும் வெ.சுப.சுப்பிரமணியன் செட்டியார் மகன் கணேசன் என்ற சோமசுந்தரத்துக்கும் 1988லும் 1969ல் பிறந்த மகள் வழிப் பேத்தி சாந்தி என்ற சிவகாமிக்கு கா.கிருஷ்ணன் செட்டியார் மகன் ரவி என்ற மீனாட்சி சுந்தரத்துக்கும் 1988லும் 1966ல் பிறந்த மகள் வழிப் பேரன் சுரேஷ்குமார் என்ற சித்சபேசனுக்கும் சுப.செந்தில்நாதன் செட்டியார் மகள் சீதாலெட்சுமிக்கும் 1991ம் ஆண்டிலும் திருமணங்கள் நிகழ்ந்தன.

ஞானப் பூங்கோதைக்கு 1987ல் சரவணன் என்ற ஆண் மகனும் 1990ல் கார்த்திகேயன் என்ற ஆண் மகனும் அந்த ஆண்டில் மீனாட்சிக்கு ஹேமலதா என்ற அலமேலுவும் சிவகாமிக்கு 1991ல் கார்த்திக் என்ற ஆண்மகனும் 1992ல் சிற்சபேசனுக்கு விஜயகுமார் என்ற ஆண் மகனும் பிறந்தார்கள்.

1972ல் பிறந்த மகன் வழிப் பேரன் ரமேஷ் என்ற ராமநாதனுக்கும் 1973ல் பிறந்த மகன் வழிப் பேரன் சோமசுந்தர ராமநாதனுக்கும் இனி திருமணம் நிகழ வேண்டும்.

## அறக்கட்டளைகள்

''தத்புருஷ தேசிகர் அறநிலை'', என்னும் பெயரில் ஒரு அறக்கட்டளையை முத்துவிழா நாயகர் நிறுவியிருக்கிறார்கள். அக்கட்டளையின் பெயராலுள்ள மூலதனத்துக்கு வரும் வட்டியிலிருந்து ஆண்டுதோறும் அறப் பணிகள் செய்யப்பெறுகின்றன. முத்துவிழா நாயகரின் முப்பாட்டனார் நாகப்ப ஐயா அவர்கள் தங்கள் குடும்பப் பொதுவில் மதுரைத் திருக்கோயில் திருப்பணியை நிறைவேற்றி அந்தக் கோயிலில் பல அறக் கட்டளைகளுக்கும் வருவாய் வரத் தக்க சொத்துக்களை எழுதி வைத்தார்கள். அவ்வறக்கட்டளைகளுள் சித்திரை விழாத் திருக்கல்யாண மண்டபப் படியும் ஒன்று. கட்டளைகளுக்காக வாங்கிக் கொடுத்த சொத்திலிருந்து கிடைக்கும்வருமானம் குறைவாக இருக்கிறதென்றும் காரணங்கூறி அறக் கட்டளைகளைப் பெயரளவுக்கு தேவஸ்தான நிர்வாகம் நடத்திவருகிறது. திருக்கல்யாண மண்டபப்படி சிறப்பாக நடைபெற வேண்டுமென்று அது இப்போது தத்புருஷ தேசிகர் அறநிலையில் சேர்க்கப் பெற்றுள்ளது. திருக்கல்யாணத் திருநாளில் கட்டளைதாரருக்குப் பரிவட்ட மரியாதையுடன் பிரசாதம் வழங்குவது நடை பெற்று வருகிறது. வயிநாகரம் குடும்பத்தாரால் நிறுவப் பெற்ற மதுரை அறுபத்து மூவர் குருபூசை மடத்தில் திருவருட் செல்வர்களான வயிநாகரம் நாகப்ப ஐயா அவர்களின் சித்திரை மக நினைவு நாளிலும் வேங்கடாசல ஐயா அவர்களின் மாசி உத்திரட்டாதி நினைவுநாளிலும் சிறப்பு வழிபாடு மாகேசுவர பூசை ஆகியவற்றுடன் ஆண்டுதோறும் நடைபெற்று வருகின்றன. இவற்றில் ஸ்ரீநாகப்ப ஐயா குருபூசை தத்புருஷ தேசிகர் அறக்கட்டளையிலிருந்தும் வெங்கடாசல ஐயா குருபூசை அவர்கள் பேரன்மார்களான க.சோமசுந்தரம் ராம.சோமசுந்தரம் ராம.ரெங்கநாதன் ஆகியவர்களாலும் நடத்தப் பெற்று வருகின்றன. இன்னும் தேவகோட்டை நகரச் சிவாலயச் சித்திரைத் திருவிழாவில் திருமுலைப்பால் விழா, சண்டேசர் விழாக்களும் சேக்கிழார் பெருமானது வைகாசிப் பூசம் மற்றை மாதப்பூச நன்னாட்களில் சிறப்பு வழிபாடுகளும் தத்புருஷ தேசிகர் அறநிலையிலிருந்து ஆண்டுதோறும் நடத்தப் பெறுகின்றன.

பிள்ளையார்பட்டித் திருக்கோயிலில் திருவெம்பாவைத் திருநாள் உபயத்துக்கு தத்புருஷ தேசிகர் அறநிலையிலிருந்து மூலதனம் வழங்கப் பெற்றிருக்கிறது. மதுரை 63வர் குருபூசை மடத்தில் எழுந்தருளியுள்ள சித்தி விநாயகப் பெருமானுக்கும் தேவகோட்டை நகரச் சிவாலயத்தில் எழுந்தருளியுள்ள சேக்கிழார் பெருமான் சண்டேசுவர மூர்த்திக்கும் தத்புருஷ தேசிகர் அறநிலையிலிருந்து திருவாசிகள் செய்து வைக்கப் பெற்றுள்ளன.

## விரைந்து பயன் தந்த பாடல்கள்

முத்துவிழா நாயகர் இயற்றிய பிரபந்தங்கள் பல. அவர்கள் பாடிய தனிப் பாடல்களும் அளவற்றன. அவற்றில் பயன் குறித்துப் பாடப் பெற்று விரைவில் பயன் தந்தவையும் உள்ளன. திருவாரூரை அடுத்த வைப்புத் தலமாகிய இராப்பட்டீச்சரம் திருக்கோயில் திருப்பணி முடித்து 1937ல் முத்துவிழா நாயகரின் தாய் மாமா குடமுழுக்குச் செய்தார்கள். அதற்கு அங்கே சென்று அலுவல்களைக் கவனித்து வந்த முத்துவிழா நாயகருக்கு அங்கு வைத்திருந்த காந்த விளக்குக்(பெட்ரோமாக்ஸ்) கண்ணாடி சூடு தோளில் பட்டமையால் வந்த சுளுக்கு பெருநலிவைச் செய்தது. அத்துன்பத்துடன் திருவாரூருக்கு வந்து தேரில் எழுந்தருளியிருந்த தியாகராஜப் பெருமானை வணங்க முற்பட்டபோது கழுத்து நிமிரமுடியாமல்,

கழுத்தைத் திருப்ப முடியாமல் கவலை மிகவும் அடைகின்றேன்.
கொழுத்த மனத்துப் பொல்லா என் குறைகள் மனத்துக் கொண்டனையோ
அழுத்தம் இல்லா எனது நெஞ்சத் தவலம் கருதி அமர்ந்தனையோ
பழுத்த அருளைப் பாவிப்பாய் பரமாதியாகப் பழம் பொருளே

என்னும் பாடலைப் பாடிச் சில நாழிகைப் பொழுதில் சுளுக்கு நீங்கும் வாய்ப்பைப் பெற்றார்கள்.

வீரவநல்லூர்த் திருக்கோயில் மார்கழித் திருவிழாவில் திருத் தேர் உருளைகள் சேற்றில் புதைந்து பல சாதனங்களுடன் பலபேர் இரண்டு நாட்கள் முனைந்தும் வெளிவராதிருந்தபோது

போதுமுன் வன்கண்மை பூமிநாதா சிறியேம்
ஏதுபிழை செய்தேம் எமை இடறி வாது செய்தாய்
நின்று வருந்துவது கண்டும் நிலைபெயரா(து)
இன்று திருத் தேரிருந்த(து) - ஏன்

என்ற பாடலைப் பாடிப் பெருமானை வேண்டத் திருத்தேர் சேற்றிலிருந்து வெளிவந்து திருவீதியுலாவுக்கு ஏற்றதாயிற்று. இன்னும் இவைபோல முத்து விழா நாயகரின் பல பாடல்கள் அவ்வப்போதுகளில் விரைந்து பயன் தந்தவைகளாக உள்ளன.

### வேத சிவாகம வித்யாலயம்

பிள்ளையார்பட்டித் திருக்கோயில் நிர்வாக உரிமைக் குடும்பங்களில் வயிநாகரம் குடும்பமும் ஒன்று. இக்குடும்பத்தார் மீனாட்சி சொக்கேசரையும் கற்பக விநாயகரையும் குல தெய்வங்களாகக் கொண்டு வழிபடும் சிறப்புடையவர்கள். இந்தக் குடும்பத்தினராகிய முத்துவிழா நாயகர் அடிக்கடி பிள்ளையார்பட்டிக்குச் சென்று வழிபடுவது உண்டு. பிள்ளையார்பட்டியில் இப்போது முப்போதும் திருமேனி தீண்டும் உரிமை உடையவராக இருப்பவர் வைதிக சைவாதிகத் துறையில் வல்லமை பெற்றசிவஸ்ரீ பிச்சைக் குருக்கள் என்னும் நாகராஜக் குருக்கள். இவர் பிள்ளையார் பட்டியில் ஒரு வேத சிவாகம வித்யாலயத்தை நிறுவி அதன் மூலம் சைவக்கிரியா விதிகள் முறையாக நடைபெற ஏற்பாடு செய்யவேண்டுமென்று முத்துவிழா நாயகரிடமும் அவர்கள் குடும்பத்தைச் சேர்ந்த கருப்பஞ்செட்டியாரிடமும்காரைக்குடிசா.கணேசன்அவர்களிடமும் தெரிவித்தார். சைவநெறிமுறையாகத் தழைக்கவேண்டுமென்ற எண்ணத்தைப் பல ஆண்டுகளாகக் கொண்டு பணி செய்துவரும் முத்துவிழா நாயகர் குருக்களின் விருப்பத்தைப் பாராட்டி மற்றும் பல அன்பர்களின் துணையுடன் 1980 ஆண்டில் ஒரு வேத சிவாகம வித்யாலயம் பிள்ளையார்பட்டியில் தொடங்கத் திருவருள் கூட்டியது. அந்த வித்யாலயத்தில் பலர் பயிற்சி பெற்றுத் தமிழகத்திலும் மலேஷியா முதலிய வெளிநாடுகளிலும் சைவக் கிரியாபாத விற்பன்னர்களாக விளங்கிக் கொண்டிருக்கிறார்கள்.

### சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் தமிழகச் சைவநெறிக் கழகம்

1979ம் ஆண்டில் முத்துவிழா நாயகரின் சீடர்கள் பலர் கூடி நெறிமுறையோடு கூடிய சமயத் தொண்டு எதிர்காலத்தில் எப்போதும் நிகழ்ந்து வரவேண்டும் என்று சிவஸ்ரீ தத் புருஷ தேசிகர் தமிழகச் சைவநெறிக் கழகம் என்னும் ஒரு கழகத்தை நிறுவினார்கள். இந்தக் கழகம் தொடர்ந்து பல திருத்தலங்களில் சிவபூசை மாநாடுகள் நடத்தியும் சைவ நூல்களை வெளியிட்டும் நல்ல பணியைச் செய்து வருகிறது.

### சிவநேசர் திருக்கூட்டம்

செட்டிநாட்டில் சிவநெறியும், செந்தமிழும் செழித்தோங்குவதற்குரிய பணிகளைச் செய்யவேண்டுமென்று 1923ம் ஆண்டில் மகிபாலன்பட்டி பண்டிதமணி கதிரேசன் செட்டியார் கோனாபட்டு மகாதேவ முருகப்ப செட்டியார், பலவான்குடி ராம.கு. ராம. இராமசாமி செட்டியார், கண்டனூர் தெ.அரு. சித. இராமநாதன் செட்டியார், காரைக்குடி முத்த. வெ. சொக்கலிங்கம் செட்டியார் ராம.உ.இராமசாமி செட்டியார் முதலிய பலர் ஒன்று கூடி சிவநேசர் திருக்கூட்டம் என்ற பெயரில் ஒரு திருக் கூடத்தை அமைத்து, அதன் சார்பில் நகரத்தார் வாழும் ஊர்களில் சமயப் பிரசாரம் செய்யவும், ஊர்களை அகர வரிசைப்படித் தொடங்கி ஒவ்வொரு ஊருக்கும் பூர்வ பட்சப் பிதோட நாள் மாலையில் சென்று அங்கங்குள்ள சிவாலயத்தில் வழிபாடு செய்து வழிபாட்டு முறையை உணர்த்தி மறுநாள் காலை மாலை இரண்டு வேளைகளிலும் விரிவுரைகள் மூலம் சமய உண்மைகளைத் தெரிவிப்பதென்றும் ஆவணித் திங்கள் விநாயகர் சதுர்த்தி நாளில் ஆண்டுதோறும் நகரக் கோவில் ஒவ்வொன்றில் ஆண்டு விழா நடத்துவதென்றும் முடிவு செய்தார்கள். அதன்படி 1923- ஆவணி விநாயகர் சதுர்த்தி நாளில் பிள்ளையார்பட்டியில் திருக்கூட்டம் தொடங்கப் பெற்றது. நகரத்தார்கள் வாழும் 78 ஊர்களிலும் ஒன்றன்பின் ஒன்றாகக் குறித்தபடி திருக்கூட்டம் இரண்டு முறை பணியாற்றியது. இடையிடையே திருத்தல யாத்திரைகளும் செய்யப் பெற்றன. 1950 - ம் ஆண்டிலிருந்து திருக்கூட்டம் காரைக்குடி நகரச் சிவாலயத்தில் ஆண்டுவிழாவைத் தொடர்ந்து நடத்தி வருகிறது. 1960 ம் ஆண்டிலிருந்து ஆண்டுவிழா, காலையில் சிவபூசகர்களின் ஆன்மார்த்த பூசை சிவ தீட்சை வழங்குதல், மாகேசுவர பூசை சமய விரிவுரைகளுடன் திருக் கூட்டத் தொடக்க நாளிலிருந்து கலந்து கொண்டு பணியாற்றி வரும் முத்து விழா நாயகர் தலைமையிலும் கண்காணிப்பிலும் நடந்து வருகிறது.

நிகழும் யுவ ஆண்டு மார்கழித் திங்கள் 3 ம் நாள் 18.12.1995 திங்கட்கிழமை, சகஸ்ர சந்திர தரிசன முத்து விழாக் கொள்ளும் நம் குருநாதர் இன்னும் பல்லாண்டுகள் வாழ்ந்து சைவ உலகத்துக்குப் பேருதவி செய்ய ஆண்டவனைச் சிந்திக்கின்றோம்.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் தமிழகச் சைவநெறிக் கழகத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

**சிவநெறித் தொண்டர் R.சரவணபவானந்தன் கழகச் செயலாளர் B. Com.,**

தேவரும் மூவரும் காணாத சிவபெருமானது திருவடிச் சிறப்பையும் உயிர்கள் உய்யும் பொருட்டு அப்பெருமான் குரு, லிங்க, சங்கமங்களை இடமாகக் கொண்டு எழுந்தருளி வந்து அருள் புரிவதையும், உயிர்களை உலகத்தோடு தொடர்புபடுத்தி உயிர்களுக்கு உடம்பு, உட்கருவி, உலகம், நுகர்ச்சி ஆகியவற்றை நல்கி வினைகளை அனுபவிக்கச் செய்து இறுதியில் சுத்தாத்துவித சித்தாந்த முக்தியாகிய சிவசாயுச்சியத்தை வழங்கி நிலையான பேரின்பத்தில் திளைக்க வைப்பதையும், வேத சிவாகமங்களாகிய, முதல் நூல்களாலும், அவற்றின் வழி வந்த சாத்திர, தோத்திரங்களாலும் நம்போன்ற சாதாரண மக்களும் புரிந்துகொள்ளும் படி எளியமுறையில் நம்குருநாதர் சிவஸ்ரீ தத்புருஷ தேசிகரவர்கள் அருளுரைகள் மூலம் உபதேசித்து வருவதைக்கேட்டசைவமெய்யன்பர்கள்பலரும்ஐயாஅவர்களிடம்முறையாகச் சிவதீட்சைபெற்றுக் கொண்ட சீடர்கள் பலரும் அடிக்கடி தொடர்பு பெற வாய்ப்பில்லாமல் இருந்தது.

குருமூர்த்திகளிடம் விசேட தீட்சை பெற்றுச் சிவபூசை செய்து வருபவர்கள் தத்தம் நாட்பூசையில் அறியாமல் நேரும் பிழைகளைப் பொறுத்து அருள்புரிய வேண்டுவதாகிய சம்வத்சர பவித்திர பூசையை ஒருநாளில் குருமூர்த்திகளிடம் செய்துகொள்ளவேண்டும் என்று பலகாலமாக எண்ணி வந்தார்கள்.

வடமொழியில் உள்ள சிவாகமக் கருத்துக்களை எல்லோரும் எளிதில் விளங்கிக் கொள்ளும்படி இதுவரை ஐயா அவர்கள் எழுதி வைத்திருக்கும் நூல்களையும் இனி அவர்களே எழுதித் தரத்தக்கதாக உள்ள இன்றியமையாத நூல்களையும் அச்சில் பதிப்பித்து வெளியிடவேண்டும் என்ற எண்ணம் பலருக்கு அழுத்தமாக இருந்தது.

1979ஆம் ஆண்டு, ஆவணித் திங்களில், காரைக்குடி அறுபத்து மூவர் குருபூசை மடத்தில், நம் குருமூர்த்திகள் தலைமையில் நடைபெற்ற சிவநேசர் திருக்கூட்டச் சிவபூசை விழாவில் அங்கு வந்திருந்த அன்பர்களின் முடிவுப்படி சிவஸ்ரீதத்புருஷ தேசிகர் தமிழகச் சைவநெறிக்கழகம் என்னும் பெயருடன் தோன்றியது.

**கழகத்தின் நோக்கங்கள்:**

1. நம் குருமூர்த்திகளின் திருவவதார நாளாகிய ஒவ்வொரு மார்கழிச் சுவாதியிலும் அவர்களது நாண் மங்கல விழாவைச் சிவபூசை மாநாடாகச் சீடர்கள் அனைவரும் கூடிக் கொண்டாடுவது.
2. சிவபூசகர்கள் சேர்ந்து செய்யும் பூசையால் சைவ மக்களை அதில் ஈடுபடும்படி தூண்டுவது.
3. நம் குருநாதர் அவர்கள் எழுதியுள்ள நூல்களை அச்சுக்குக் கொண்டு வருவது.
4. சிவபூசை மாநாட்டை ஆண்டுதோறும் பதிகம் பெற்ற ஏதேனும் ஒரு சைவத் திருத்தலத்தில் நடத்துவது; விழா நடைபெறும் திருத்தல யாத்திரையில் அருகில் உள்ள திருத் தலங்களையும் வழிபட ஏற்பாடு செய்வது.

**கழக நிர்வாகம்**

கழக நிர்வாகத்துக்குத் தலைவராக அமராவதிபுதூர் வயிநாகரம் சோம.கருப்பன் செட்டியார் அவர்களும் துணைத்தலைவர்களாக ஒக்கூர்.நா.சா.சாத்தப்ப செட்டியார் திருச்சி ப.மூக்கப்பிள்ளை ஆகிய இருவரும் செயலாளராகத் திருச்சி ப.சுப்பிரமணியப்பிள்ளையும் துணைச் செயலாளராகப் 'பெல் நகர்' வை.கி.செல்லமணியும் பொருளாளராகத் திருச்சி தைலா.கோபாலும் தேர்ந்தெடுக்கப்பெற்றதுடன் 26 உறுப்பினர்களும் தேர்வு செய்யப் பெற்றார்கள்.

பின்னர் 6-10-1983ல் தலைவர் சோம.கருப்பன் செட்டியார் சிவசாயுச்சிய பதவி அடைந்தவுடன் 29-12-83 ல் திருவண்ணாமலையில் நடைபெற்ற நமது 5வது சிவபூசை மாநாட்டில் தலைவராக திருச்சி ப.மூக்கப்பிள்ளையும், துணைத் தலைவர்களாக ஒக்கூர் நா.சா.சாத்தப்ப செட்டியார், வயிநாகரம் கரு.சோமசுந்தரம் செட்டியார், திருச்சி தைலா.கோபால்சுவாமி ஆகிய மூவரும், செயலாளராக திருச்சி ப.சுப்பிரமணியபிள்ளையும், துணைச் செயலாளராக திருச்சி 'பெல் நகர்' வை.கி.செல்லமணியையும், பொருளாளராக திருச்சி A.S.சுப்பையா செட்டியாரும் தேர்வு செய்யப் பெற்றார்கள். 1984 ல் துணைத் தலைவர்களில் ஒருவரான ஒக்கூர் நா.கா.சாத்தப்ப செட்டியார் அவர்களும் சிவசாயுச்சியும் பெற்றுவிட்டார்கள்.

அதன்பின்னர் 9-1-1991 ல் திருப்பாதிரிப்புலியூரில் நடைபெற்ற நமது கழகத்தின் 12வது சிவபூசை மாநாட்டில் தலைவராக திருச்சி ப.மூக்கப்பிள்ளையும் துணைத்தலைவர்கள் ஆக வயிநாகரம் க.சோமசுந்தரம் செட்டியார் திருச்சி தைலா கோபால்சுவாமி ஆகிய இருவரும், செயலாளராக திருச்சி R.சரவணபவானந்தனும் துணைச் செயலாளராக திருச்சி 'பெல் நகர்' வை. சி.செல்லமணியும் தேர்வு செய்யப்பெற்றார்கள்.

அதன்பின்னர் 3-5-1992ல் திருச்சி மலைக்கோட்டை நூற்றுக்கால் மண்டபத்தில் நடைபெற்ற பொதுக்குழுக் கூட்டத்தில் தலைவராக திருச்சி தைலா.கோபால்சுவாமியும் துணைத் தலைவர்களாக மதுரை நா.சா,இராமநாதன் செட்டியார் மதுரை டாக்டர் ராஜம் சேதுராமன் ஆகிய இருவரும், செயலாளராக திருச்சி R.சரவணபவானந்தனும் இணைச் செயலாளராக திருச்சி பா.சுந்தரும், துணைச் செயலாளராக திருச்சி K.சக்திவேலும் தேர்வு செய்யப் பெற்றார்கள்.

**திருவானைக்காவில் முதல் மாநாடு:**

12-12-1980ல் குருமூர்த்திகளின் 66வது நாண்மங்கல நாளில் திருவானைக்காவில் சன்னதித் தெரு அ.மு.க.'ருக்' வேத பாடசாலையில் முதல் மாநாடு நடைபெற்றது.துணைத் தலைவர் சாத்தப்ப செட்டியார் இடபக்கொடி ஏற்றினார்கள்.தருமபுர ஆதீனம் மகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி அருளுரை வழங்கினார்கள். சிவபூசைத் திருமுறை என்ற நூல் வெளியிடப்பெற்றது.ஈரோடு அ.ஞானசம்பந்தன் திருவான்னைக்கா டாக்டர் க.அப்புலிங்கம் முதலிய பெருமக்கள் விழாவில் கலந்து சிறப்பித்தார்கள்.

**மதுரையில் இரண்டாம் மாநாடு:**

1-1-1981ல் மதுரைத் திருக்கோவிலில் இரண்டாம் மாநாடு நடைபெற்றது. திருக்கோவில் பொற்றாமரைக் கரையில் சிவஸ்ரீ சந்திரசேகரப்பட்டர் என்ற தங்கப்பட்டர் இடபக்கொடி ஏற்ற ஆன்மார்த்த சிவபூசை நிகழ்ந்தது. விழாவில் சைவர் யார்? என்ற நம் குருநாதர் எழுதிய நூல் வெளியிடப் பெற்றது.மதுரைத் திருஞான சம்பந்தசுவாமிகள் ஆதீனம் மகாசந்நிதானம், திருமுருக கிருபானந்த வாரியார், அறநிலையத்துறை ஆணையர்

உ.சுப்பிரமணியம், தொழிலதிபர் லெ.நாராயணன்செட்டியார், திருக்கோவில் அறங்காவலர் குழுத் தலைவர் வ.நாசிதம்பரம்செட்டியார் முதலிய பெருமக்கள் சிறப்புரையாற்றினார்கள். தெற்காவணிமூலவீதி, கன்னிகா பரமேசுவரி கல்யாண மண்டபத்தில் திரு.கிட்டப்பாசெட்டியார் மாகேசுவரபூசைப் பொறுப்பை ஏற்று நடத்தி வைத்தார்கள்.

**சிதம்பரத்தில் மூன்றாம் மாநாடு:**

21-12-1981ல் சிதம்பரம் ராஜாசர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் சத்திரத்தில் மூன்றாம் மாநாடு நடைபெற்றது.சிவகங்கை கரையில் தலைவர் சோம.கருப்பன்செட்டியார் இடபக்கொடி ஏற்ற ஆன்மார்த்த சிவபூசை நிகழ்ந்தது. விழாவில் திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடாலயத்தலைவர் R.கனகசபைப்பிள்ளை, வாகீசம்பிள்ளை, திருநாவுக்கரசுபிள்ளை,சம்பந்தம் பிள்ளை ஆகியோர் சிறப்புரையாற்றினார்கள்.கூத்தப்பெருமான் என்னும் நூல் வெளியிடப்பெற்றது. சீகம்பட்டிக் கணிதசோதிடர் சு.இராமலிங்கம் மாகேசுவர பூசைப்பொறுப்பை ஏற்று நடத்தி வைத்தார்கள்.

**திருவாரூரில் நாலாம் மாநாடு:**

8-1-1983ல் திருவாரூர்த் திருக்கோவில் தேவாசிரிய மண்டபத்தில் 4ஆம் மாநாடு நடைபெற்றது.தலைவர் கோம.கருப்பன்செட்டியார் இடபக்கொடி ஏற்ற ஆன்மார்த்த சிவபூசை நிகழ்ந்தது.விழாவில் V.S.T.சம்பி தெட்சிணாமூர்த்திமுதலியார் ஆருரான்சர்க்கரை ஆலை மேலாளர் இராமகிருஷ்ணன் முதலிய பெருமக்கள் சிறப்புரையாற்றினார்கள்.பழனி ஓதுவாமூர்த்தி மு.சுப்பையா முதலியாருக்குத் 'திருமுறைச் செம்மல்' என்னும் சிறப்புப் பெயர் பொறித்த பொற்பதக்கத்தையும் 501ரூபாய் கொண்ட பணமுடிப்பையும் பொருளாளர் தைலா.கோபால்சுவாமி வழங்கினார்கள்.அவர்களே மாகேசுவரபூசைப் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டு நடத்தினார்கள்.

**திருவண்ணாமலையில் ஐந்தாம் மாநாடு:**

29-12-1983ல் திருவண்ணாமலைத் திருக்கோவிலில் 5ஆம் மாநாடு நடைபெற்றது துணைத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற க.சோமசுந்தரம் இடபக்கொடி ஏற்றினார்கள். தலைவர் சோம.கரு அவர்கள் சிவபதவி அடைந்தபடியால் துணைத்தலைவர் ப.மூக்கப்பிள்ளை தலைவராகத் தேர்வு செய்யப்பெற்றார்கள். மெ.க.சத்திரத்தில் அ.க.அ.சித.சிதம்பரம் செட்டியார் சுப.இராமையா செட்டியார் பழ.அமிர்தலிங்கம். புரிசை முருகேச முதலியார் ஆகியோர் சிறப்புரையாற்றினார்கள்.நம் குருமூர்த்திகளுக்குச் 'சைவ சித்தாந்த சரபம்' என்னும் சிறப்புப் பெயர் பொறித்த பொற்பதக்கம் பொன்னாடை முதலியன வழங்கப்பெற்றன. திருச்சி அப்பாவு அவர்கள் பொற்பதக்கத்துக்குரிய செலவை ஏற்றுக்கொண்டார்கள்.

**திருக்காளத்தியில் ஆறாம் மாநாடு:**

8-12-1984ல் ஆந்திர மாநிலத்தில் உள்ள திருக்காளத்தித் திருக்கோவிலில் ஆறாம் மாநாடு நடைபெற்றது. இதில் திருக்காளத்தித் திருக்கோவில் தலைமை அர்ச்சகர் பரசுராமகுருக்களும், திருத்தணி ஓதுவார்சாமிநாதனும் பெரும்பங்குஎடுத்துக்கொண்டார்கள்.பி.மா.சோமசுந்தரனார். பொத்தனூர் மணிவாசகம் சேதுராமலிங்கன் ஆகிய பெருமக்கள் சிறப்புரையாற்றினார்கள். திருமயம் முன்னாள் தாசில்தார் உத்தமன் மாகேசுவர பூசைப் பொறுப்பை ஏற்று நடத்தினார்கள்.

### காஞ்சிபுரத்தில் ஏழாம் மாநாடு:

5-1-1986ல் காஞ்சிபுரத்தில் திருக்கோவிலில் ஏழாம் மாநாடு நடைபெற்றது.காஞ்சிச் சிவனடியார் திருக்கூட்டத்தினர் இவ்விழாவிற்குப் பேராதரவு புரிந்தனர். மாகேசுவர பூசையும் அவர்களே நடத்தினார்கள்.குருநாதர் அவர்கள் எழுதிய 'சிவபூஜா விதியும் விளக்கமும்' என்ற நூல் வெளியிடப்பெற்றது.விழாவில் தொண்டைமண்டல ஆதீனம் மகாசந்நிதானம் சிவனடிமை நல்லி சுப்பிரமணிய செட்டியார். கன்னியப்பஉடையார், புலவர் தா.சுப்பிரமணியம் ஆகியோர் சிறப்புரை ஆற்றினார்கள்.இராணிப்பேட்டை பி.மா.சோமசுந்தரனாருக்குச் 'சைவசித்தாந்தச் சண்டமாருதம்' என்ற பட்டம் வழங்கப்பெற்றது.

### திருப்பெருந்துறையில் எட்டாம் மாநாடு:

27-12-1986ல் ஆவுடையார் கோவில் எனப்பெறும் திருப்பெருந்துறைத் திருக்கோவிலில் திருவாசகமுனிவர் முத்துசாமி தேசிகர் ஊராட்சிஒன்றியத் தலைவர் கருப்பண்ணன் அம்பலம் ஆகியோர் பேராதரவில் எட்டாம் மாநாடு நடைபெற்றது.'சைவக்கிரியா விதிகள்' என்னும் நூல் வெளியிடப்பெற்றது.சேதுராமலிங்கன், கல்யாணசுந்தரம் ஆகியோர் சிறப்புரையாற்றினர்.

### இராமேசுவரத்தில் ஒன்பதாம் மாநாடு:

17-12-1987ல் இராமேச்சுரம் திருக்கோவிலில் ஒன்பதாம் மாநாடு நடைபெற்றது. டாக்டர்.ந.மாணிக்கம்.சேதுராமலிங்கன் ஆகியோர் சிறப்புரையரற்றினர்.திருச்சி பைக்கடை R.M.கோபால் மாகேசுவர பூசைப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு நடத்தினார்கள்.விழாவுக்கு வந்திருந்தவர்களுக்கு ஸ்ரீ காசிமடத்தில் இரண்டுவேளை உணவு வழங்கினார்கள்.

### பல்லவனீச்சரத்தில் பத்தாம் மாநாடு:

2-1-1989ல் பல்லவனீச்சரம் காவிரிப்பூம்பட்டினத்தில் நகரவிடுதியில் பத்தாம் மாநாடு நடைபெற்றது.டாக்டர்.ந.மாணிக்கம். சேதுராமலிங்கன். அ.மணிவாசகன் ஆகியோர் சிறப்புரையாற்றினர். மேலப்பள்ளம் கு.ரெங்கநாதன்பிள்ளை விழாவுக்கு உதவி செய்தார்கள்.துணைத்தலைவர் க.சோமசுந்தரம் மாகேசுவர பூசை முதலாக உணவுச் செலவு அனைத்தையும் ஏற்றுக்கொண்டார்கள்.

### தேவகோட்டையில்(பவளவிழா) பதினோறாம் மாநாடு:

23-12-1989ல் தேவகோட்டை நமது குருநாதர் இல்லமான பாலறாவாயர் நிலையத்தில் பதினோராம் மாநாடு நடைபெற்றது.அறநெறியண்ணல் திரு.வெ.நாராயணன் செட்டியார் அவர்கள் பவளவிழாவுக்குத் தலைவராக இருந்து சிறப்பித்தார்கள்.பல அறிஞர்களின் சொற்பொழிவுகளும் கவியரங்கமும் அனைவரையும் மகிழச் செய்தன.கோயமுத்தூர் இராம.ரெங்கநாதன் செட்டியார், ஆத்தங்குடி காடப்ப செட்டியார், டாக்டர் சுப.அண்ணாமலை, டாக்டர்.ந.மாணிக்கம், பொள்ளாச்சி சு.தி.பழனியப்பச் செட்டியார், டாக்டர் ஆனந்தராசன், டாக்டர் பிச்சைக்குருக்கள். மதுரை இராகவன்முத்து போன்றோர் விழாவில் கலந்து சிறப்பித்தனர். நமது ஐயா அவர்களின் பட்டணப்பிரவேசமும் கொலுவும் நமது கழக உறுப்பினர்களுக்கு உற்சாகத்தையும் பெருமையையும் அளித்தன.விழாவிற்கு வந்திருந்த அனைத்து உறுப்பினர்களும் நமது குருநாதரிடம் ஆசிபெற்றார்கள்.

## திருப்பாதிரிப்புலியூரில் பன்னிரெண்டாம் மாநாடு:

9-1-1991ல் திருப்பாதிரிப்புலியூர்த் திருத்தலத்தில் ஆயிரவைசியர் திருமண மண்டபத்தில் பன்னிரெண்டாம் மாநாடு நடைபெற்றது.கழகத்துணைத் தலைவர் தைலா.கோபால்சுவாமி இடபக்கொடி ஏற்றினார்கள். ஞானியார் சுவாமிகள் கலந்துகொண்டு வாழ்த்துரை வழங்கினார்கள்.

கடலூர் க.சம்பந்தனார்.டாக்டர்.ந.மாணிக்கம்.பொத்தனூர் மணிவாசகம். மதுரை கல்யாணசுந்தரம். இராமேஸ்வரம் க.சேதுராமலிங்கன் ஆகியோர் சிறப்புரையாற்றினார்கள் நமது கழக உறுப்பினர் விழி இழந்தோர் பள்ளித் தலைமையாசிரியர் R.ஆறுமுகம், சாம்பசிவ ரெட்டியார், மேல்பட்டாம்பாக்கம் ஆதி.அருணாசலம் போன்றோரின் உதவியுடன் கடலூர் பு.தமிழரசன் அவர்களின் அன்பான உபசரிப்பும் ஆதரவும் விழாவை சிறப்புறச் செய்தன.

## மதுரையில் பதின்மூன்றாவது மாநாடு:

30-12-1991ல் மதுரை L.N.S.ராமமூர்த்தி& சன்ஸ் திருமண மண்டபத்தில் பதின்முன்றாவது மாநாடு நடைபெற்றது.நமது கழகத்தின் துணைத்தலைவர்களில் ஒருவரான டாக்டர்.ராஜம் சேதுராமன் அவர்கள் இடபக்கொடி ஏற்றினார்கள்.டாக்டர்.ந.மாணிக்கம், புலவர் கல்யாணசுந்தரம், புலவர் தா.குருசாமி தேசிகர், புலவர் சி.சுந்தரராமன், கு.வேலன், க.சேதுராமலிங்கன் ஆகியோர் பாராட்டுரை செய்து சிறப்பித்தனர்.

## திருமறைக்காட்டில் பதினான்காவது மாநாடு:

20-12-1992ல் திருமறைக்காடு S.K.S & V.V.திருமண மண்டபத்தில் பதினான்காவது மாநாடு நடைபெற்றது. கழகத் தலைவர் தைலா.கோபால்சுவாமி இடபக்கொடி ஏற்றினார்கள்.ஸ்ரீகாசிவரசி திருப்பனந்தாள் ஆதீனகர்த்தர் விழாவில் கலந்து வாழ்த்தினார்கள். பல்கலைக்கழகத் துணைவேந்தர் தி.பாலசுப்பிரமணியம் போன்றோர் கலந்து சிறப்புரை ஆற்றினார்கள். 'திருவாரூர் நான்மணிமாலை' என்ற உரைநூல் வெளியிடப்பெற்றது. விழாவின் முழுப்பொறுப்பையும் ஏற்று வேதாம்பாள் ஆச்சி மாகேசுவர பூசையையும் குருபாத பூசையையும் நடத்தினார்கள். விழாவில் வேதாம்பாள் ஆச்சிக்கு 'சிவநெறிச் செல்வி' என்ற பட்டம் வழங்கப்பட்டது.

## கோபிசெட்டிப்பாளையத்தில் பதினைந்தாவது மாநாடு:

6-1-94ல் கோபி செட்டிப்பாளையத்தில் சீதா கல்யாணமண்டபத்தில் பதினைந்தாவது மாநாடு நடைபெற்றது.கழகத்தலைவர் தைலா.கோபால்சுவாமி இடபக்கொடி ஏற்றினார்கள்.தவத்திரு சுந்தர சுவாமிகள் விழாவில் கலந்து வாழ்த்துரை வழங்கினார்கள். சிவம் ஐயா, பொத்தனூர் மணிவாசகம், K.M. தெட்சிணாமூர்த்தி, கு. வேலன், க. சேதுராமலிங்கன் K.S. முத்துலெட்சுமணகவுண்டர் போன்றோர் சிறப்புரையாற்றினார்கள். வினா வெண்பா என்ற நூல் வெளியிடப்பெற்றது. கோபி ஞானசுந்தரம் அச்சக உரிமையாளர் அ. சுப்பிரமணியம், N.K. ராமசாமி போன்றோர் விழாவிற்கு பெரும் தொண்டு செய்து விழாவை சிறப்பித்தார்கள். நமது குருநாதர் ஐயா அவர்களுக்கு இடையில் 4-4-1994ல் மதுரை சரசுவதி நாராயணன் கல்லூரியில் தமிழக ஆளுநர் மேதகு சென்னாரெட்டி அவர்கள் தலைமையில் சரசுவதி நாராயணன் மணிவிழா அறக்கட்டளை சார்பில் 'சிறந்த தமிழ் அறிஞர்' என்ற விருது வழங்கி, பொற்கிழியும், வெண்கலப்பதக்கமும் வழங்கப்பெற்றது. ஷ விழா மிகவும் கோலாகலமாக நடைபெற்றது. அதனைப் பாராட்டி திருச்சியில் 10-7-1994ல் மலைக்கோட்டை நூற்றுக்கால் மண்டபத்தில் ஒரு பாராட்டுவிழா ஐயா அவர்களுக்கு அளிக்கப்பெற்றது.பாராட்டுவிழாவில் பாரதிதாசன் பல்கலைக்கழகத்துணைவேந்தர் V.R.முத்துக்கருப்பன். டாக்டர் சுப. அண்ணாமலை.

டாக்டர்.ப. ஆறுமுகம். சிவக்கொழுந்து தேசிகர் கு.வேலன் க.சேதுராமலிங்கன் பொத்தனூர் மணிவாசகம் R. முருகேசன் பா.சுந்தர் போன்றோர் பாராட்டுரைகள் அளித்தார்கள். விழா மிக மிகச் சிறப்பாக நடைபெற்றது.அதுபோல் குளித்தலையிலும் பெருந்துறையிலும் மதுரையிலும் பாராட்டுவிழாக்கள் நடந்தன.

## திருக்கொடுங்குன்றத்தில் பதினாறாம் மாநாடு:

28-12-94 ல் திருக்கொடுங்குன்றத்தில் பதினாறாம் மாநாடு அருவியூர் வடக்கு-தெற்கு வளைவுநகரத்தார் கல்யாணமண்டபத்தில் நடைபெற்றது, கழக தலைவர் தைலா.கோபால்சுவாமி இடபக்கொடி ஏற்றினார்கள்.சைவர் யார்? என்ற நூலின் இரண்டாம் பதிப்பு வெளியிடப்பெற்றது.கு.வேலன்.சொ.அ.மணிவாசகம் க.சேதுராமலிங்கம் S.பாலகிருஷ்ணன் டாக்டர் ந.மாணிக்கம் R.முருகேசன் சுப.இரத்தினம் செட்டியார் போன்றோர் சிறப்புரை அளித்தார்கள்:N.[illegible] S.ரெகுநாதன் A.S.ராதாகிருஷ்ணன் பெரி.சோமசுந்தரம், S.இளையபெருமாள், சிவ.கலைவாணன், குமாரசாமி ஆகியோர் விழா சிறப்பாகத் திகழ பெரும் தொண்டு புரிந்தனர்.

எல்லா மாநாடுகளிலும் குருமூர்த்திகளின் சமயக்கருத்துக்கள் நிறைந்த தலைமையுரை நிகழ்ந்தது. ஒவ்வொரு மாநாட்டிலும் நூற்றுக்கு மேற்பட்ட சிவபூசகர்கள் கலந்துகொண்டு சிவபூசை செய்தார்கள்.எல்லா மாநாடுகளிலும் பல அன்பர்களுக்குச் சிவதீட்சை செய்து வைக்கப் பெற்றது. திருக்காளத்தி மாநாட்டில் இருந்து எல்லா மாநாடுகளிலும் அன்பர்களுக்குப் பேருந்து வசதி செய்து கொடுக்கப்பெற்று அருகில் உள்ள தலங்களுக்கும் சென்று வழிபாடு செய்யும் வாய்ப்பபைக் கழகம் உண்டாக்கியிருக்கிறது.

கழகத்தின் கிளைகள் குளித்தலை மதுரை கொங்குமண்டலம் ஆகிய இடங்களில் தோற்றுவிக்கப் பெற்று நல்லமுறையில் பணி செய்து வருகின்றன.குளித்தலை கிளைக் கழகத்தின் தலைவராக ந.சுப்பிரமணிய முதலியார் அவர்களும் துணைத் தலைவராக வை.பழனிவேல் அவர்களும் செயலாளராக ந.சுப்ரமணியம் அவர்களும் துணைச் செயலாளராக பி. குமார் அவர்களும் தேர்வு செய்யப்பட்டு நல்லமுறையில் செயலாற்றி வருகின்றனர்.

மதுரை கிளைக் கழகத்தின் தலைவராக நா.சா.இராமநாதன் அவர்களும் துணைத் தலைவராக இ.கருப்பசாமி மூப்பனார் அவர்களும் செயலாளராக அ.ச.ராதாகிருட்டினன் அவர்களும் துணைச் செயலாளராக S.ரெகுநாதன் அவர்களும் தேர்வு செய்யப்பட்டு நல்லமுறையில் செயலாற்றி வருகின்றன.

கொங்கு மண்டலக்கிளையின் தலைவராக மு.இராமலிங்கம் அவர்களும் செயலாளராக கு.வேலன் அவர்களும் தேர்வு செய்யப்பட்டு நல்லமுறையில் செயலாற்றி வருகின்றனர். நமது குருநாதர் அவர்களால் எல்லா மாநாடுகளிலும் அன்பர்களுக்கு சிவ தீட்சைகன் வழங்கப் பெற்றன. இன்றுவரை நமது குருநாதர் அவர்களால் வழங்கப்பட்ட தீட்சைகள் விவரம்.

ஆசாரியாபிஷேகம் - 2
சாதகாபிஷேகம் - 24
நிர்வாணதீட்சை - 114
விசேட தீட்சை .-474
சமயதீட்சை -2838

கழக அடையாள முத்திரையும் விளக்கமும்

சுற்றிலும் கழகப் பெயர் பொறிக்கப்பெற்று நடுவில் சிவலிங்கமூர்த்தி இடபதேவர் திரிசூலதேவர் சமயச் சின்னங்களாகிய உருத்திராக்க மாலையுடன் திருநீற்றுக்கோவில் எட்டு இதழ் தாமரை ஆகியவை அமைக்கப் பெற்றுள்ளது.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# ''ஓங்கார மெய்யன்''

(பெருஞ்சொல்மணி - புலவர். தா.சுப்ரமணியம். காஞ்சிபுரம்.)

இக்கட்டுரை ஆசிரியர் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியராய் இருந்து ஓய்வு பெற்றவர். காஞ்சிசிவனடியார் திருக்கூட்டத்தின் சைவப்பெரும் பணிகளில் பங்குகொண்டு சலியாது உழைத்துவருபவர்.சமய, விசேட, நிருவாண தீட்சைகள் பெற்று முறையாக சைவ நெறியில் ஒழுகி வருபவர்.

**பதிப்பாசிரியர்.**

சைவ சமயத்தின் பன்னிரு திருமுறைகள் மாபதையை உய்யச் செய்கின்ற உயிர்க்கருவூலங்களாகும். அவற்றினுள் நால்வர் அருளிச் செய்த தேவாரமும், திருவாசகமும் சிறப்பாக நமக்குத் துணைபுரிகின்றன. திருவாசகம் ஞானத்தின் ஞானமாக இருந்து, சித்தமலம் அகல்வித்து,சிவனைச் சிவமாக்கி, அத்தனருள் பெறச் செய்கின்ற அற்புத தெய்வப்பனுவலாகும்.திருவாசகத்திலுள்ள ஐம்பத்தோரு பதிகக் கருத்துகட்கும் சிவபுராணம் திறவுகோலாய் இருக்கிறது.அதில்வரும் ''உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா'' என்ற ஒரு தொடர் பற்றிய பொருளைக் கண்டு பயன்பெறுவோம்.

சிவபுராணத்தை, நமச்சிவாய நாமத்தை வாழ்த்தியும், நாதன் அடியை வாழ்த்தியும் ஆசிரியர் தொடங்குகிறார். சிவபரம்பொருளின் அருளின்றி அவன் திருவடியைத் தொழுது உய்ய இயலாது.அவனருளே கண்ணாகக்கொண்டு அவன்தாள் வணங்கவேண்டுமென்று உபதேசமும் செய்தருளுகின்றார் மணிவாசகப்பெருமான்.சிந்தை மகிழச் சிவபுராணம் தன்னை ஓதினால் முந்தை வினை முழுவதும் மெலிந்து ஓய்ந்துவிடும்.

அறியாமையைத் தரும் ஆணவத்தில் அழுந்தி நிற்கின்ற உயிர்கள் அனைத்திலும் உடனாய் நின்று ஒலி, ஒளி ஊட்டி ஆட்டுவிப்பது, தாயினும் சிறந்த தயாபரனாகிய அவன் அருள்திறமாகும்.

''ஊற்றாகி உள்ளே ஒளித்தாய் போற்றி
ஓவாத சத்தத்தொலியே போற்றி
காற்றாகி எங்கும் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி '' - என்பது அப்பர் அருள்வாக்கு.

நக்கீரர் பெருமானது திருமுருகாற்றுப்படையில்,

''ஓவற இமைக்கும் சேண்விளங்கவிர் ஒளி'' - என்பது ஒப்பு நோக்கி சிந்திக்கத்தக்கது.

ஓங்காரத்தை ஓர் எழுத்து மந்திரம் - ஏகாட்சரம் என்பர். உப்பில்லாது உணவில்லை என்பதுபோல பிரணவம் இல்லாது மந்திரமில்லை. மந்திரங்கட்கெல்லாம் முதன்மையானதும் மூலமானதும் இதுவே. அகர,உகர,மகர எழுத்துக்கள் ஒன்றுகூடி பிரணவம் ஆயிற்று. ஓங்காரமே பஞ்சாட்சரமாகிநின்று ஐந்தொழிலையும் இயற்றி உலகை உய்விக்கிறது. இதனைத் திருமந்திரப்பாடல் ஒன்றால் அறியலாம். அத்திருப்பாடல்:

''போற்றுகின்றேன் புகழ்ந்தும் புகழ் ஞானத்தை
தேற்றுகின்றேன் சிந்தை நாயகன் சேவடி
சாற்றுகின்றேன் அறையோ சிவயோகத்தை
ஏற்றுகின்றேன் நம்பிரான் ஓர் எழுத்தே'' என்பது.

''மூலாதாரத்து மூண்டெழுகனலைக் காலால் எழுப்பும் கருத்தறிவித்தே'' - என்பது விநாயகர் அகவலில் வருவதாகும்.

ஓங்காரம் உலகத்துடன் ஒன்றாய், வேறாய், உடனாய் நின்று அனைத்தையும் இயக்கி அருள்பாலிக்கின்றது.

"ஒரெழுத்தில் ஆறெழுத்தை ஓதுவித்த பெருமாளே" - என்று திருப்புகழ் கூறும். இத்தகு சிறப்புடைய ஓங்காரத்தின் பயனை அறிந்து நலம்பெறுதல் நமக்குள்ள தலையாய கடமையாகும்.

காணப்படுகின்ற பொருள்கள் அனைத்தும் அழியக்கூடியனவையே என்பது சுந்தரமூர்த்திசுவாமிகள் திருவாக்கு. காட்சிக்கு வரும் தனு, கரண, புவன போகங்கள் அனை ும் உருமாற்றம் பெற்று ஒடுங்குவனவேயாகும். தத்துவங்கள் எல்லாம் ஆன்ம உயர்விற ப் படிக்கட்டுகளாய் இருந்து துணை செய்வனவாயினும் அவையும் அழியக் கூடியனவே.

கிடைத்தற்கரிய பிறவியும் கிடைத்தற்கரிய சற்குருவும் நமக்கு வாய்த்துள்ளதால், அவர்வழி, சமயம், விசேடம், நிர்வாணமாகிய தீட்சைகளை பெற்றுய்வோமாக.

**திருச்சிற்றம்பலம்.**



வண்டமிழ் ஞானசிரியர் வாழ்க்கை ஏடு



<-- பள்ளிப் பருவம்

சமய தீட்சை
பெற்றவுடன் -->





<-- விசேட தீட்சை பெற்றவுடன்



உபதேச மந்திர பொருளாலே -->

வண்டமிழ் ஞானசிரியர் வாழ்க்கை ஏடு



இசை அறிஞராக



இதழாசிரியராக



போதகாசிரியராக



பேச்சாளராக





திருமணம் ஆனவுடன்



அருட்கொலுவில் திருநீறு சாத்துதல்

முத்துவிழாச் செல்வரின் வாழ்க்கை ஏடு



முத்துவிழாச் செல்வரின்
பெற்ரேர்கள்



முத்துவிழாச் செல்வரின்
சுவீகாரத்தந்தை



முத்துவிழாச் செல்வருக்கு ஆரத்தி எடுத்தல்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# குரு வணக்கம்

அறிவுசெயல் விருப்பமெனும் முத்தி றத்தும்
ஆணவத்தின் பிடிநெகிழ்ந்து மெல்லத் தேயச்
சரியைமுதல் தனிநான்கு படியில் ஏறச்
சார்புணர்ந்து சார்ந்திருக்கும் நிலைமை நீங்க
உரியநெறி காட்டுவித்து நீறு பூசி
உயர்தீக்கை வழங்கியருட் போகம் நல்கும்
பரிவுடைய தத்புருஷச் சிவம் எம் கோன்தன்
பனிமலராம் இணையடிகள் போற்றி! போற்றி!

என வணங்கிப் போற்றும்:

சித்தாந்த ரத்தினம்
**ச. திருஞானசம்பந்தம்**
வணிக வரி அலுவலர் (ஓய்வு)
குலசேகர நாதர் கோயில் தெரு,
தென்காசி.

சித்தாந்த ரத்தினம்
கவிஞர்
**சிவ. சதாசிவம்**
52, வடக்கு ஒப்பனைத் தெரு,
தென்காசி.

"மேன்மை கொள் சைவ நீதி
விளங்குக உலக மெல்லாம்"

திருச்சிற்றம்பலம்

# விழா நாயகரின் பல்துறைப் புலமை



அ. ஞானசம்பந்தன், ஈரோடு



(குறிப்பு :- இக்கட்டுரை ஆசிரியர் மரபு வழுவாத சைவசாத்திரப் பயிற்சி, சிவபூசை ஆகியவற்றை மேற்கொண்டு ஆண்டுதோறும் ஆனி, மார்கழித் திருமஞ்சன தரிசனத்தை சிதம்பரத்தில் இடைவிடாது தரிசித்தவர்கள். பல ஊர்களில் சைவசித்தாந்த வகுப்புகளும் திருமுறைகளும் நிகழ்த்தியவர்கள். — பதிப்பாசிரியர்)

தேவாரம்.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருவாசகம்.

தேவதேவன் மெய்ச்சேவகன் றென்பெருந்துறை நாயகன்
மூவராலு மறியொணாமுத லாயவானந் தமூர்த்தியான்
யாவராயினு மன்பரன்றி யறியொணாமலர்ச் சோதியான்
தூயமாமலர்ச் சேவடிக்கணஞ் சென்னிமன்னித் திகழுமே.

திருச்சிற்றம்பலம்.

1926-ம் ஆண்டு தேவகோட்டை சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கத்தில், சைவசித்தாந்தசரபம், எனது ஞானகுருபரர் சிவஸ்ரீ ஈசான சிவாச்சாரிய சுவாமிகளுடன் ஒருங்கிருந்து, தூத்துக்குடி சைவசித்தாந்த ஞானபாநு ஸ்ரீ பொ. முத்தையா பிள்ளையவர்கள்பால் ஏழையேனும் சைவசித்தாந்த சாத்திரப் பயிற்சி மேற்கொண்டிருந்த அந்நாளிலிருந்து இந்நாள்காறும் சிவஸ்ரீ தத்புருஷ தேசிகோத்தம ஐயா அவர்களின் தொடர்பு எனக்குண்டு என்று பெருமை கொள்ளுகிறேன்.

எனது ஞானகுருபரர் சிவஸ்ரீ ஈசான சிவாச்சாரிய சுவாமிகள் பால் ஐயா அவர்கள் சமய, விசேட, நிருவாண தீட்சை, ஆசாரியாபிடேகம், சைவ சித்தாந்த சாத்திரக் கேள்வியாதியன மேற்கொண்ட போதிலிருந்து அவர்கள்பால் எனக்கிருந்த தொடர்பு மேலும் வலுப் பெற்றுள்ள தென்பதைக் கூற வேண்டுவதின்று.

ஐயா அவர்கள் தமது இளம்பருவத்திலேயே தமிழிலக்கண இலக்கியங்கள் நன்கு கற்றுத் தேர்ந்து தமது பெயருக்கேற்ப அப்போதிருந்தே பாவகைப் பனுவல்கள் பல இயற்றும் ஆற்றல் பெற்றிருந்தார்கள். அவர்களாலியற்றப்பெற்ற இனிய பாப்பனு-வல்கள் பலப்பல. மேலும், திருமுறைக்கருத்துக்கள், சைவ சித்தாந்த உண்மைகள் முதலியன தெளிந்த முறையில் எடுத்துக் காட்டும் உரைநடை நூல்களும் அளப்பில செய்துள்ளார்கள். அன்றியும், சமய சம்பந்தமான பத்திரிகைகளிலே திருமுறைகள், சாத்திரங்களில் மக்கள் தெளிவு பெற்றுப்பயன் கொளும் வண்ணம் அரிய கட்டுரைகள் உபகரித்தும் சமய சம்பந்தப்பட்ட சபைகளிலே நுண்ணிய அரிய கருத்துக்களையும் எளிதில் விளக்கிப் பயனடையும் வண்ணம் கேட்பார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழியும் உபந்யாச உபதேசங்கள் மேற்கொண்டிருப்பது உலகறிந்தவுண்மை. இவையெல்லாவற்றிற்கும் மேலாக நமது ஐயா அவர்கள் தாம் மேற்கொண்டிருக்கும் சிவதீட்சை ஆசாரியாபிடேகப் பேற்றினுக் கேற்பச் சைவாநுட்டானம் சிவபூசை முதலியன நாளும் வழாது விதிமுறையாற் செய்து வருத லோடமையாது, ஆங்காங்கே பலருக்கும் பஞ்சாட்சரோபதேசம், சிவதீட்சைப் பேறு, சிவபூசைப்பேறு முதலியன நல்கியருளி அவர்களும் உய்திபெறும் வண்ணம் அவர்களை ஞான நன்னெறியில் உய்த்துவரும் ஞானதான வள்ளலாகவும் விளங்குகிருர்கள்.

இவ்வாறு நூலாசிரியர், உரையாசிரியர், போதகாசிரியர், ஞாஞசிரியர் என்னும் நால்வகையாசிரியத்தன்மையும் தம்பால் ஒருங்கமையப் பெற்றதோர் உத்தமோத்தம ஞான பானுவாக ஐயா அவர்கள் நம்மிடையே பிரகாசிக்கிருர்களென்பது நாம் முன்னைப் பிறப்பில் செய்த முதுதவத்தின் பேறேயாகும்.

''அருளறி வொழுக்க மான மாசாரம் பொறைசீ ரன்பு
தருமதன் னெறிநற் ருனஞ் சத்தியந் தவத்தோ டாண்மை
விரதநோன் பிரக்க மீசன் மெய்யருட் பத்தியுள்ளோர்
ஒருவரையு லகிற் காண்ப தரிதுகா ணுயர்த வத்தீர்''

என்றிங்ஙனங் கலியுக தருமத்தை நன்கு விளக்கிக் கூறிப்போந்த தென்றமிழ்க் கவியும் நன்றுநாண, அருளறிவாதிய உத்தமோத்தம குணங்களும், அத்தகைய ஒழுக்கமாகிய செயல்களும் ஒருங்கு குழுமிக் கரசரணுதிய வயவங்களைப் பொருந்தி ஒருரு வெடுத்தாற் போன்றவர், செந்தமிழிலும் வடமொழியிலும் பன்னூலாராய்ச்சி வல்லுநர், ஆராய்ச்சியா மாரமிர்தம் ஓயாது பொழியும் அறிவுமாமேகம், ''தேருந்தோறுமினிதாந் தமிழ்'' என்ற வண்ணம் பழகுந் தோறும் பத்தியுமறிவும் பரத்தில் ஒத்திடும் பண்பினர்க்கெத்திறத் தானு மினிதாந் தன்மையர், புலவர் மாமணி, சைவசூளாமணி யென்றின்னனவாகப் புனைந் துரைத்து மெய்யறிவாளர் போற்றும் சிவஸ்ரீ தத்புருஷ தேசிகோத்தம சிவஞானச் செல்வப் பெரியார் அவர்கள் தமது எண்பத்தோராண்டு நிறைவு மங்கல முத்து விழாவினை மிகச் சிறப்பாக்க் கொண்டாடவும், பின்னர் மற்றுமோரெண்பதும் பெற்றுமேலும் அரோகதிடகாத்திரர்களாய்ப் பூரணயுளுடன் எக்குறையுமின்றி இன்பப் பெரு வாழ்வெய்தி இன்னுமின்னும் மேற்கண்ட சிவஞானத்திருத் தொண்டினை ஆற்றிடவும், அதனல் யாவரும் ஆன்மலாபமடையவும் பெருங்கருணைபாலித்தருளுமாறு அகண்டாகார நித்தவியாபக சச்சிதானந்தப் பிழம்பாகிய திருச்சிற்றம்பலத்தெஞ்சிவக்கொழுந்தின் பொன்னர் திருவடிக் கமல மெமதொரு முடிக்கமலமாகக் கொண்டு முப்போதும் முக்கரணங்களானும் மூவிதவழி பாடுஞ் செய்கின்ரும்.

சீர்பூத்த கருவிநூ லுணர்ச்சி தேங்கச்
சிவம்பூத்த நிகமாக மங்க ளோங்கப்
பார்பூத்த புறச்சமய விருள்க ணீங்கப்
பரம்பூத்த சைவநிலை பாரோர் தாங்கப்
பேர்பூத்த சடைமவுலிப் பிரானுர் செய்ய
பிறங்கொளிசேர் நலங்குலவு கமலம் போலும்
வார்பூத்த கழலடியை மனத்து நிறீஇ
மறவாம லனுதினமு மதித்து வாழ்வாம்.

திருச்சிற்றம்பலம்.

● மணிவிழா மலர்க்கட்டுரை



# நம் குருநாதர் - பல்லாண்டு வாழ்க

● க. சேதுராமலிங்கன்

குறிப்பு: இக்கட்டுரை ஆசிரியர் மதுரை தமிழ்ச்சங்க கலாசாலையில் பேராசிரியராய் இருந்த நல்லசிவம் பிள்ளையின் வளர்ப்பு மகனும் மாணவரும் ஆவார். திருவையாறு அரசர் கல்லூரியில் பயின்று வித்துவான் தேர்வுபெற்று உயர்நிலைப்பள்ளிகளில் தமிழ் ஆசிரியராய் இருந்தவர். இளமையிலேயே தமிழ்ச்செய்யுட்களை யாப்புமுறை வழுவாது இயற்றுபவர். சமய விசேட நிர்வாண தீட்சைகளையும் கிரியாபிஷேகத்தையும் பெற்று சிவநெறியில் நிற்பவர்.

செந்தமிழை வடமொழியைத் திருந்தக் கற்று
சிவநெறியை நாடெங்கும் பரப்புகின்ற
சுந்தரனே! தத்புருஷ! தூய்மை சேர
தொல்வினை நோய்க் கட்டறுக்கத் தீக்கைப் பேற்றைத்
தந்தவனே! தமிழறிஞ! சாரும் சைவ
சித்தாந்தச் சரபமெனச் செப்ப வாழ்வோய்
சுந்தரமாம் திருவடியைப் போற்றி நின்றேன்
சுடர்மணியே ஆசியெனக் கருளு வாயே!

திருச்சிற்றம்பலம்

உ

சிவமயம்

# நம் குருநாதர்

'' சிவநெறிப்புலவரேறு '' **க. சேதுராமலிங்கன், இராமேச்சுரம்.**

'' மான்காட்டி மான்பிடிக்கும் வாய்ப்பை நினைப்பூட்டி
ஊன்காட்டும் நம்போல் உருக்காட்டி — வான்காட்ட
வந்த '' ஸ்ரீ தத்புருஷ மாமுனிவன் மாமலர்த் தாள்
'' சிந்தனையாற் சேரும் திரு.''

குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே. (திருமூலர்)

குருவைச் சிவமாகக் கொள்வது நம் சைவ மரபு நூலுணர்வுடையோர் குருவேறு சிவம்வேறு எனக்கொள்ளமாட்டார்கள். குருவையே சிவமாகக் கொண்டு வழிபடுவார்கள் சிறந்த ஞானபரம்பரையான், குருபரம்பரையில், வந்த என் குருநாதர், '' சைவசித்தாந்த சரபம் '' சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்கள், இளமையிலேயே மரபுக் கவிபாடும் ஆற்றலுடையவர்கள், '' புலவர்க்கு வெண்பாப்புலி'' யென்று கூறுவார்கள். நம் குருநாதர், வெண்பாப்பாடுவதில் தன்னிகரற்றுத் தனிப்பெரும் நிலையிற் சிறந்து விளங்கிக் கொண்டிருக்கின்றார்கள்.

இளமையிலேயே கவிபாடும் ஆற்றல் கண்டுவியந்து, ஆத்தங்குடி சனாதனதர்ம மகா சபையார், '' பாலகவி '' யென்றுபட்டமளித்துப் பாராட்டி மகிழ்ந்தார்கள்.

1915-ல் கோனாபட்டில் மகாதேவ முருகப்பச் செட்டியாரின் இரண்டாவது புதல்வராகத் தோன்றிய, நம் குருநாதர் அவர்கள் 1934-ல் அமராவதி புதூர் வயிநாகரம் குடும்பத்தில் வேங்கடாசலம் செட்டியார் அவர்களுக்குச் சுவீகாரப் புதல்வராக வந்தார்கள். சம்பந்தர் தெருவில் பாலருவாயர் நிலையத்தில் வதியும் நம் குருநாதர், தமிழ்ப்பேரறிஞர்கள் பலருடனும், சைவத்திருமடங்களின் தலைவர்கள் பலருடனும், நெருங்கிப் பழகும் வாய்ப்பை இளமையிலேயே பெற்றார்கள். மதுரைத் திருஞான சம்பந்தர் ஆதீனம், தருமையாதீனம், துறைசையாதீனம், திருவண்ணாமலையாதீனம். திருப்பனந்தாள் காசிமடம் ஆகிய மடாதிபதி-களால் பெரிதும் பாராட்டப் பெற்றவர்.

சேக்கிழார் திருநாளை பற்பல ஆண்டுகள் பற்பல தமிழ்ப் பேரறிஞர்களைக் கொண்டு சைவசித்தாந்தப் புரவலர், சிவபாதசேகரர், தமிழ்வள்ளல், திருபணிச்செல்வர், சிவபூஜைச் செல்வர், சிவத்திரு. உ. ராம. மெ. சுப. சேவு. மெ. மெய்யப்பச் செட்டியாரவர்களுடன் சேர்ந்து, திட்டமிட்டுச் சிறப்புடன் நடத்திய பேராற்றலுடையவர். '' கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும், வேட்ப மொழிவதாம் சொல் '' என்றபடி இனிக்க இனிக்க, அருமையான கருத்துக்களை, எளிமையான, இனிய முறையில் எடுத்துக்கூறும் திறமை யுடையவர். புதுக்கோட்டை, நாகர்கோயில், தூத்துக்குடி, திருநெல்வேலி, சென்னை, தேவகோட்டை, திருச்சிராப்பள்ளி, திருவானைக்கா, திருக்காரூயில், மதுரை, குளித்தலை, துலாவூர் முதலிய இடங்களில் சாத்திர வகுப்புக்கள் நடத்தினார்கள். மதுரை, குளித்தலை, திருச்சிராப்பள்ளி, கைலாசபுரம் ஆகிய இடங்களில் இவ்வகுப்புகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. இவ்வகுப்புகளில் வடமொழி வேத சிவாகமங்கள் பன்னிரு திருமுறைகள், பதினான்கு சாத்திரங்கள், புராணங்கள் ஆகியவை விளக்கப்பெறும்.

நம் குருநாதர் பெற்ற பட்டங்களோ அளவில. அவர்களைப் பாராட்டிய மன்றங்களோ அளவில, திருவண்ணாமலை ஆதீனம் குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி ஆறுமுக தேசிகர் அவர்கள்; ''விரிவுரை அரசு'' என்ற பட்டத்தையும், தூத்துக்குடிச் சைவ சித்தாந்த சபையினர், ''சித்தாந்தப் புலவர் மாமணி'' என்ற பட்டத்தையும், மதுரைத் தினஞான சம்பந்தர் ஆதீனம், குருமகா சந்நிதானம், ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞான சம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள் ''சித்தாந்த சைவ வித்தகர்'' என்ற பட்டத்தையும், திருவண்ணாமலை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாச்சார்ய சுவாமிகள் (குன்றக்குடி அடிகளார்) ''பெரும்புலவர்'' என்ற பட்டத்தையும், சரஸ்வதி நாராயணன் மணி விழா அறக்கட்டளையின் சார்பில் தமிழியல் அறிஞர் என்ற பட்டத்தையும், பொற்கிழியையும் தமிழக ஆளுநர், மேதகு சென்னாரெட்டி அவர்கள், மதுரை சரசுவதி நாராயணன் கல்லூரியில் வழங்கினார்கள்.

திருச்சிராப்பள்ளி தமிழ்ச்சங்கத்தார் மாகவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் நினைவுப் பரிசாக பொன்னாடை போர்த்தி பொற்கிழி நடத்தினார்கள்.

நம் குருநாதர் அவர்கள் இசைப்பெரும்புலமையும் பெற்று, பற்பல கீர்த்தனைகளையும், இசைப்பாடல்களையும் இயற்றியுள்ளார்கள். திருப்புகழ்ச்சந்தத்தில் நூற்றுக்கணக்கானப் பாடல்-களைப் பாடியுள்ளார்கள். இவற்றை, திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகத்-தாரும், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தாரும் அச்சிட்டு வெளியிட்டுள்ளார்கள்.

''நாம் இருவர், நமக்கு இருவர்'' என்ற இன்றைய மரபுப்படி, பெண் ஒன்றும் ஆண் ஒன்றுமாக இரு மக்களை உடையவர்கள். பெண் மகவுக்கு மீனாட்சி என்ற பெயரையும், ஆண் மகவுக்குச் சொக்கலிங்கம் என்ற பெயரையும் சூட்டி மகிழ்ந்தார்கள் ''வடவேங்கடம் தென் குமரி ஆயிடைத்தமிழ் கூறும் நல்லுலகம்'' என்ற முறையன்றி காசி முதல் கன்னியா குமரி ஈறாக உள்ள இடங்களில் தமிழையும் சைவத்தையும் பரப்பிக் கொண்டு வருகிறார்கள். தமிழ்நாடு மட்டுமின்றி, கடல்கடந்தும் சென்று, மலேசியா, பர்மா, இலங்கை, தாய்லாந்து, வியட்னாம், ஆகிய இடங்களில் சமய, இலக்கியச் சொற்பொழிவாற்றி சைவ சமயத்தையும் தமிழையும் வளர்த்தவர்.

இவையனைத்திற்கும் தலைமணியாக விளங்குவது அவர்களுடைய சமயத் தொண்டே யாகும். ''சைவசித்தாந்த சரபம்'' ''சிவாகம ஞான பானு'' பழநி, சிவஸ்ரீ காசி வாசி ஈசான சிவாச்சார்ய சுவாமிகளைக் குருநாதராகப்பெற்று, சமயம், விசேடம், நிர்வாணம், ஆச்சார்யாபிஷேகம் பெற்று, தமிழ்நாட்டிலும், மலேயா, வியட்நாம், கம்போடியா, தாய்லாந்து, இலங்கை ஆகிய நாடுகளிலும் இன்றுவரை நாலாயிரத்திற்கும் மேற்பட்டவர்கட்கு, சமய, விசேட நிர்வாண தீட்சைகளையும், கிரியாபிஷேகத்தையும், ஆச்சார்ய அபிஷேகத்தையும் செய்துவைத்துள்ளனர்.

நம் குருநாதர் சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்களால் எழுதபெற்ற நூல்கள் அளவில. அவற்றுள், செய்யுள் நடையிலும், உரைநடையிலும், மொழிபெயர்ப்பு வகையிலும் நூற்றுக்கு மேற்பட்ட நூல்கள் ஆக்கியுள்ளார்கள், பல நூல்கட்கு உரையெழுதியுள்ளார்கள். பதிப்பித்த நூல்களும் பல. நம் குருநாதர் அவர்கள் அவ்வப்போது பாடிய, வாழ்த்தியருளிய தனிப்பாடல்கள் ஆயிரக்கணக்கானவை. எழுதிய தனிக்கட்டுரைகளும் பல. இவற்றின் பட்டியல் விரிவஞ்சி விடுக்கப்பெற்றது. ''செட்டி நாடு'' என்ற இதழின் ஆசிரியராகவும் இருந்து பணிகள் செய்தவர். தேவகோட்டை, தமிழிசைப் பள்ளியின் தலைவராகவும் ஆலோசகராகவும் பல ஆண்டுகள் இருந்து திறம்பட நடத்தியவர்கள். புதுக்கோட்டைத் தனியரசு நடத்தி வந்த பண்டிதர் தேர்வுக்கு, தேர்வாளர் குழுத்தலைவராகப் பல்லாண்டுகள், இருந்து தமிழ்ப்பணிபுரிந்தவர். தமிழகத்தின் பலப்பல இலக்கிய, சமய. சாத்திர மாநாடு களிலும் தலைமையேற்றும், விரிவுரை செய்தும், தமிழ்த் தொண்டும், சமயத்தொண்டும் ஆற்றிவருபவர்கள்.

இவர்கள் இல்லத்தில் நிரந்தரமாக, வேதிகையும், ஓம குண்டமும் காட்சியளிக்கும். சாதாரண நாட்களிலேயே, இவர்கள் இல்லம் திருமடமாகவோ ஆலயமாகவோ காட்சியளிக்கும். தீக்கை நாட்களில் ''பாலருவாயர் நிலேயம்'' திருக்கயிலாயமாகவே காட்சியளிக்கும்.

சிவபூஜை செய்பவர்களிடம் ''பிராசாத நெறி'' வேர்விடவேண்டு மென்பதும், அது அவரவர்கள் ஊற்றத்தால் ஊற்றெடுக்க வேண்டுமென்பதும், நம் குருநாதருடைய எண்ணமாகும். பிராசாதம் என்ருல் சிவஞான கதியைத் தருவது என்று கூறுவார்கள். (பிரா-சிவஞானம். சா-கதி தம்-தருவது) சிவ பூஜையில் அந்தர்யாகம் ஊன்ற ஊன்ற, இயல்பாகப்பிராசாத சித்தி வளர்ந்து உணரப்பெறுமென்பது குருநாதரின் உபதேசமாகும்.

பொன் விழா, மணிவிழா, பவள விழாக்கண்ட குருநாதர் அவர்கள். இன்று சதாபிஷேக விழாவையும் சிவபெருமான் திருவருளால் பெற்று மகிழ்கின்ருர்கள். சதாபிஷேக விழாக்கண்ட குருநாதர் சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்கள் இன்னும் பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்து, பற்பலருக்குத் தீட்சை செய்துவைத்து, சமயப் பயிர் வளர்த்து மகிழ, என் அம்மையப்பனும், ஆன்ம நாயகனுமாகிய, ஸ்ரீ மீனுட்சி சமேத சொக்கலிங்கப் பெருமான் திருவடிகளே இறைஞ்சுகின்றேன். நம் குருநாதர் சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்களின் பொன்னுர் திருவடிகளேயும் இறைஞ்சி மகிழ்கின்றேன்.

வாழ்க சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர்!

---

உ
சிவமயம்

# பல்லாண்டு வாழ்க

## "சிவநெறிப்புலவரேறு"

## தமிழாசிரியர் இராமேச்சுரம்

"சிவநெறிப்புலவரேறு" **கு. சேதுராமலிங்கன்.**

1 சீரார் தேவ கோட்டைநகர்
சிவமே பெருக்கும் தத்புருஷம்
பாரார் - போற்றச் சிவதீக்கை
பரிவோ டருளும் பரமகுரு
ஏரார் மறைகள் திருமுறைகள்
இனிதே உணர்த்தும் நாவலவர்
நாரார் உளத்தார் சிவமாய
நம்பன் அருளால் நனிவாழ்க !

2 என்பெரும் குருவே ! போற்றி
இணையிலாப் புலவ ! போற்றி
பன்னரும் பலநூல் கற்றுப்
பரிந்துரை செய்வாய் ! போற்றி
மன்னுசாத் திரங்க ளோடு
மாமறை யுணர்ந்தாய் ! போற்றி
கன்னலே ! தேனே ! போற்றி
கருணைமா முகிலே ! போற்றி

3 பாலரு வாயர் பதம்பரவும் பாலகவி
சீலமிகு தத்புருஷ தேசிக நீ - ஞாலமிசை
சைவம் பரப்பித் தமிழ்பரப்பிப் பல்லாண்டு
தெய்வ அருளால் திகழ்.

4 சைவசித் தாந்த வித்தகர் என்று
சாற்றும் மதுரை ஆதீனம்
சைவசித் தாந்த சரபம் நீ என்று
சாற்றும் சைவ நெறிக்கழகம்
சைவசித் தாந்த சாகரம் என்றே
சாற்றும் சைவப் பேருலகம்
சைவசித் தாந்த மாமலை யென்று
சாற்றும் சிவமே ! நனிவாழ்க !

5 '' தமிழியல் அறிஞர் '' என்று
தக்கதோர் விருது பெற்ற
அமிழ்தமே ! பாலே ! தேனே !
அருட்பெருங் குருவே ! வாழ்க !
இமிழ் திரைக் கடல்சூழ் ஞாலத்து
எம்மனோர் தங்கட் கெல்லாம்
தமனியம் என்ன வந்த
தனிப்பெரும் குருவே ! வாழ்க !

6 மகாதேவ முருகப்பன் மகவாய் வந்து
மலர்தமிழும் வடமொழியும் நன்குகற்று
மகாதேவர் திருவருளால் தமிழ்நா(டு) எங்கும்
மகிழ்வுடனே சமயஇலக் கியத்தொண் டாற்றி
சிகாமணியாய்ச் சிறந்தொளிர்ந்த ஆசாற் சேர்ந்து
சிறப்புறுநந் தீட்சைதனைப் பெற்று வந்து
மகாகுருவாய் வந்தவெங்கள் இராம நாத
மணமலரே பல்லாண்டு வாழ்க ! வாழ்க.

7 சொக்கலிங்கம் மீனுட்சி மக்கள் என்று
சொல்லுகின்ற முறைமாற்றிக் காத லாலே
சொக்கலிங்கம் மீனுட்சி தந்தை யான
சொல்லரிய சற்குருவே ! வாழ்க வாழ்க
தக்கபல நூல்கற்றுப் புலமை பெற்ற
தத்புருஷ தேசிகநின் பொற்ருள் வாழ்க !
மிக்கஅருள் அன்புநனிமேவி விளங்கும் எங்கள்
மேன்மைமிகு பாலகவி வாழ்க! வாழ்க !

8 சைவம் தழைக்கத் தமிழ்தழைக்கச்
சாற்றும் தொண்டின் நெறிதழைக்கச்
சைவ அடியார் திறன்தழைக்கச்
சாரும் தெய்வ நெறிதழைக்க
உய்வு தரும்நல் திருமுறைகள்
உலகம் எங்கும் நனிதழைக்கச்
செய்யும் தொண்டால் சிறந்தொளிரும்
சீர்சால் குருவே ! வாழியவே

9 சிவப்பழமே ! சிவமலரே ! சிவமணமே !
சிவம் பெருக்கும் சீல ! எங்கள்
தவத்திருவே ! தத்புருஷ தேசிகப்பேர்
தயைமிகுந்தாய் ! அன்பின் ஊற்றே !
பவநோயை வேரறுக்கப் பரமசிவன்
பதமலரைப் பணியச் செய்யும்
சிவமணியே ! சிவநேச ! சிவனருளால்
சிறப்புடனே வாழ்க ! வாழ்க !

10 என்றன் குருநாதர் ஈடில் பெரும்புலவர்
மன்றுடும் ஈசன் மலர்ப்பதத்தை - என்றும்
வணங்கி மகிழ்ந்து வழிபடவும் வைக்கும்
குணமுடையான் என்றன் குரு

11 மாமதுரைச் சொக்கர் மலர்ந்த கருணையினல்
நாம்வணங்கும் நல்ராம நாதனெனும் - கோமகனர்
பல்லாண்டு வாழ்க ! பரம்பொருளின் பேரருளால்
பல்லாண்டு வாழ்க ! பரிந்து

12 சைவசித் தாந்த சரப மெனப்பெயர்கொள்
தெய்வஸ்ரீ தத்புருஷ தேசிகரின் - உய்வுதரும்
பாத மலர்தொழுவோம் பாவமெல்லாம் வேரறுப்போம்
ஏதமின்றி வாழ்வோம் இனிது

13 பன்னூல்கள் ஆய்ந்துணர்ந்து பண்பார் சிவதீக்கை
நன்னர்ப் புரிந்தருளும் நல்ஆசான் - என்னுடைய
சற்குருவாம் ஞானபிதா தத்புருஷ தேசிகர்தம்
பொற்ருள் எனக்குப் புகல்

14 ஆண்டெண் பதையடைந்த ஆற்றல்மிகு பேரிளை !
காண்டற் கரிய கடவுளை - ஈண்டெங்கள்
கையில்வரு வித்துக் களிப்பருளும் சற்குருவாம்
செய்யவனே வாழ்க ! சிறந்து

15 வாழிசைவ சித்தாந்த சரபம் வாழி !
வாழிசிவ தத்புருஷம் மலர்ந்தாள் வாழி !
வாழிசைவ அடியவர்கள் வாழி ! வாழி !
வாழிசிவ பூஜகர்கள் வாழி ! வாழி !
வாழிசைவத் திருமுறைகள் வாழி ! வாழி !
வாழிசைவ சாத்திரங்கள் வாழி ! வாழி !
வாழிசைவம் தமிழென்றும் வாழி ! வாழி !
வாழிசைவ நெறியுலகம் வாழி ! வாழி !

சிவஸ்ரீ தத்புருஷம் வாழ்க ! வாழ்க !
சைவநெறி தழைத்து ஓங்குக !

# நான் அறிந்த பாலகவி



கி. வா. ஜகந்நாதன்

இக்கட்டுரை ஆசிரியர் சென்னைப் பல்கலைக் கழக வித்துவான் தேர்வில் முதன்மை யிடத்தைப் பெற்றுத் திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமி நாதத் தம்பிரான் சுவாமிகள் ஏற்படுத்திய கட்டளைப் பரிசு பெற்றவர். சென்னை கலைமகள் திங்கள் இதழின் ஆசிரியராகப் பல ஆண்டுகள் பணியாற்றித் தமிழ் உலகத்தில் பாராட்டுப் பெற்றவர். செந்தமிழ்ப் புதுக்கவிகளைத் தங்கு தடையின்றி விரைந்து பாடும் ஆற்றல் பெற்றவர். மகாமகோபாத்தியாய சாமிநாத ஐயர் பதிப்பித்த பல தமிழ் நூல்களுக்கும் துணை செய்து சிறந்தவர்.

— பதிப்பாசிரியர்.

அன்று அவர் இளைஞர். சுறுசுறுப்பாக இருப்பார். உருத்திராக்கமும் திருநீறும் விளங்கும் திருக்கோலம் அன்றும் இருந்தது. அவரை யாரும் பாலகவி என்றே அழைத்தனர். பாலகவி வயிநாகரம் இராமநாதன் செட்டியார் என்பது அவருடைய முழுப் பெயரானாலும் அவ்வளவு நீளமான பெயரை யாரும் சொல்வதில்லை. பாலகவி என்பதில் அவருடைய திறமையும் பெருமையும் அடங்கியிருக்கின்றன. தமிழ் நூல்களைப் பயிலவும் தமிழ்ச் சொற்பொழிவுகளைக் கேட்கவும் தமிழ்ப் புலவர்களோடு பணிவாகப் பழகவும் அவருக்குப் பேரார்வம்.

பல ஆண்டுகளுக்கு முன் கோனைப் பட்டில் வாழ்ந்த திரு. மகாதேவமுருகப்ப செட்டியாரவர்களின் அறுபதாண்டு நிறைவுச் சாந்தி விழாவில் நடைபெற்ற தமிழ்ப் பேரவைக்கு எங்கள் ஆசிரியப் பெருமான் டாக்டர் மகாமகோபாத்தியாய ஐயரவர்கள் எழுந்தருளினர்கள். அப்பொழுது அவர்களுடன் நானும் போயிருந்தேன். அப்பொழுது தான் இளம் பிள்ளையாகிய பாலகவியை நான் பார்த்தேன். மகாதேவ முருகப்ப செட்டியார் பாலகவியைப் பெற்ற தந்தையார். ஞானசம்பந்தப் பெருமானிடம் பாலகவிக்கு அளவு கடந்த பக்தி. அவருடைய பெயரையே தம் மாளிகைக்கு இட்டார். ''பாலருவாயர் நிலையம்'' பாலகவியின் நிலையம் என்பதைப் பலரும் அறிவர். அவர் வாழும் வீதியே சம்பந்தர் வீதி என்று நினைக்கிறேன். ஒவ்வோர் ஆண்டும் ஞான சம்பந்தரைப் பற்றிய பிரபந்தம் ஒன்றை இயற்றி வெளியிட்டார். சில வெளியீடுகளுக்கு ஐயரவர்களின் ஆசி கிடைத்திருக்கிறது.

நாளடைவில் பாலகவியின் இலக்கிய இலக்கண அறிவும் சாத்திர அறிவும் ஓங்கி வளர்ந்தன. சைவ சித்தாந்த சாத்திரம் அவருடைய உள்ளத்தைப் பெரிதும்

கவர்ந்தது. முறையாகத் .தீட்சைகளைப் பெற்ருர். மரபு பிறழ்ந்த செய்கைகளை அவர் விரும்புவதில்லை. இப்போது பிறருக்கும் சிவதீட்சை செய்விக்கும் தத்புருஷ தேசிகராக விளங்குகிருர்.

மகா தேவ முருகப்ப செட்டியாரின் திருமகளுகப் பிறந்தவர் வயிநாகரம் குடும்பத்துக்குச் சுவீகாரப் பிள்ளையாகப் போனுர். அந்தக் குடும்பத்தினர் மதுரையில் திருப்பணி செய்து பழங்காலத்தில் கும்பாபிஷேகம் செய்தவர்கள். வயிநாகரம் இராமநாதன் செட்டியார் என்ற கவிஞர் அந்தக் குடும்பத்தில் இருந்தார். அவர் மயிலாசலக் கலம்பகம் என்று குன்றக்குடிக்கு ஒரு கலம்பகம் பாடியிருக்கிருர். பல அருமையான தனிப்பாடல்களைப் பாடியிருக்கிருர். பாலகவி சென்றுசேர்ந்த குடும்பமும் கவிஞர்கள் பிறந்த குடும்பம்.

பாலகவியிடம் சில காலம் பாடம் கேட்டவர் இப்போது ''தமிழ் வாணன்'' என்று இளைஞர் உலகம் பாராட்டும் திரு. லெ. ராமநாதன். அவர் அந்தக் காலத்தில் அடிக்கடி பாலகவியின் பெருமையைச் சொல்வார். என்னிடம் பேசும் போதெல்லாம்; 'பாலகவி இப்படிச் சொல்வார், பாலகவி அப்படிச் சொல்வார்' என்று சொல்வார். வேறு பலருக்கும் பாலகவி பாடம் சொன்னதுண்டு.

இப்போது தமிழ் நூல்களை அவரிடம் கற்றுக் கொண்டவர்களை விட அவரிடம் தீட்சை பெற்றுக்கொண்ட வர்கள் மிகுதி; நூற்றுக்கணக்கானவர்கள் உண்டு. என்னுடைய உழுவலன்பர் திரு. பழ. சண்முகம் செட்டியாரவர்கள் பர்மாவில் இருந்தபோது பாலகவியிடம் தீட்சை பெற்றுச் சிவபூஜை எழுந்தருளுவித்துக் கொண்டார். அவர் இப்போது தாடி வளர்த்துக் கொண்டு சிதம்பரத்தில் நடராஜப் பெருமான் சந்நிதியில் பெரும் பொழுதைக் கழித்து இன்புறுகிருர். அவரைப் பார்த்தால் முனிபுங்கவரைப் போல தோற்றம் அளிப்பார். அவரைக் கண்டு, அவருடைய தீட்சாகுரு தத்புருஷ தேசிகர் என்று தெரிந்து கொண்டால் பாலகவியின் பெருமையை உணரலாம்.

பாலகவி கவிஞர்; எழுத்தாளர். பத்திரிகை ஆசிரியராக இருந்திருக்கிருர். நல்ல சொற்பொழிவாளர். தேவகோட்டையில் சேக்கிழார் திருநாளை மிகச் சிறப்பாகப் பல ஆண்டுகள் கொண்டாடினுர். பண்டிதமணி, சிவக் கவிமணி கோவை சுப்பிரமணிய முதலியார் முதலிய பலர் இந்த விழாவில் அரிய சொற்பொழிவுகளை ஆற்றியிருக்கிருர்கள்.

பாலகவியின் சொற் பொழிவுகளில் தொடக்கம், இடை, முடிவு என்ற பகுதிகள் கச்சிதமாக அமைந்திருக்கும். செய்யுட்களின் நுட்பங்களை நயமாக எடுத்துச் சொல்வார். பிற்காலங்களில் சித்தாந்தக் கருத்துக்கள் செறிந்த சொற்பொழிவுகளைச் செய்யலானுர். நுட்பமான சமயக் கருத்துக்களைத் தெளிவாகச் சொல்லுவார்.

இன்று சிவஸ்ரீ தத்புருஷராக விளங்கும் அவர் எண்பத்தியொரு ஆண்டுகள் நிறைந்து அறிவிலும். பக்தியிலும் சமய ஒழுக்கத்திலும் நிறைவு பெற்று விளங்குகிருர். அவரை நினைக்கும் போதெல்லாம் எனக்கு இளமை ததும்பிய கோலத்தோடு நிற்கும் பாலகவியே நினைவுக்கு வருகிருர்.

இவர் இறைவன் திருவருளால் இன்னும் பல்லாண்டுகள் வாழ்ந்து சைவத்துக்கும் தமிழுக்கும் தொண்டாற்றி விளங்க வேண்டுமென்று வாழ்த்துகிறேன்.

★★



# விழா நாயகரின் சேவை

## பண்டிதமணி சி. கணபதிப் பிள்ளை

ஈழநாட்டு செந்தமிழ்ப் பெரும் புலவர்களில் ஒருவர். அங்குள்ள பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றியவர்கள். யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் அவர்கள் மருமகனும் மாணுக்கரும் சிதம்பர சைவப்பிரகாச வித்யாசாலை தர்மபரிபாலகர் ஆகவும் இருந்த பொன்னம்பலம் பிள்ளை அவர்களிடம் மாணவராகவந்த சிறப்புடையவர்கள். பிரம்மச்சரிய ஒழுக்கத்தை ஆயுட்காணும் கடைப்பிடித்த நல்லொழுக்கச்சீலர்.

— பதிப்பாசிரியர்

'' நாமார்க்குங் குடியல்லோம் '' என்ற முறையில் நாவலர் பெருமான் வெளியிட்ட கருத்தொன்றை, இந்தச் சந்தர்ப்பத்தில் வாசித்துக்காட்ட விரும்புகிறேன். அது பின் வருமாறு :

'' நம் மன்பர்களே; நெடுங்கால அநுபவத்தால் அறிந்த உண்மைகளைத் தேசாபிமானத்தினுலும், சமயாபிமானத்தினுலும் உங்களுக்கு வெளிப்படுத்திய நம்மை உங்களுக்குப் பகைவரெனக் கொண்டு தூஷித்துத் திரியாது, மேலே பேசப்பட்ட குறைபாடுகளை விரைவில் அகற்றி, உங்கள் இகபர லாபங்களை அடையும்படி முயலக் கடவீர். நம்மை நீங்கள் எப்படித் தூஷிக்கினும் உங்களுக்கு நன்மையாக முடிபவைகளை உங்களுக்கு வெளிப் படுத்துதற்கு நாம் சிறிதுந் தடைப்படா வண்ணஞ் சிவபெருமான் திருவருள் செய்க. பொதுவாகப் பலருக்கும் நன்மைகளைச் சொன்னோம். திருந்த விருப்பமுடையவர் திருந்தட்டும். திருந்த விருப்பமில்லாதவர் தமக்குப் பயன் படாதாயினும் பிறர் சிலருக் காயினும் பயன் படலாமே என்றெண்ணி வாய் மூடிக் கொண்டிருக்கட்டும். நாங்கள் எப்படி நடக்கினும் நடப்போம் நீர் ஒன்றும் பேசாதிருக்கலாமே என்பார்க்கு, நாம் எப்படிக் கண்டிப்பினுங் கண்டிப்போம் நீர் ஒன்றும் பேசாதிருக்கலாமே என்போம். பிறர் செய்யும் அநீதிகளைக் கண்டித்தற்கு நீர் யார்; கடவுளோ, அரசரோ என்பார்க்கு, கடவுள் கட்டளைக்கும், அரசர் கட்டளைக்கும் மாருகவே பிறர் செய்யும் அநீதிகளை, அக்கட்டளைகட்கு அமைந்து கண்டித்தலாகிய நமது நீதியைக் கண்டித் தற்கு நீர் யாரோ சற்றே பேசும் என்போம். ஆகா! பல மனிதராலும் பகைக்கப் பட்டீர் இனிக் கெட்டீர் என்பார்க்கு, ஓகோ! கடவுளுக்கு அஞ்சும் அச்சம் பெருகப் பெருக மனிதருக்கு அஞ்சும் அச்சம் குன்றிக் குன்றி விடும் என்பதறியீர் போலும் என்போம். எவ்விதத்தானும் வாயெடுக்க ஒட்டேம் ஒட்டோம் ''.

இந்த வீரம் வீதிட்டெழுகின்ற வார்த்தைகள் அமைந்த பகுதி, இற்றைக்கு ஏறக்குறைய நூருண்டுகளுக்கு முன், நாவலர் பெருமான் எழுதி வெளியிட்ட

[10—7—68 புதன்கிழமை இரவு 7 மணியளவில் சைவபரிபாலன சபை நாவலர் ஆச்சிரம மண்டபத்தில் சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்களுக்கு நடாத்தப்பட்ட பிரியா விடைக் கூட்டத்தில் பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்கள் நிகழ்த்திய பாராட்டுரை.]

'யாழ்ப்பாணச் சமயநிலை' என்ற துண்டுப் புத்தகத்தில் வருகின்றது.

அன்று யாழ்ப்பாணத்தை மூடிய கிறிஸ்தவ இருளைப் போக்கி, சைவமக்களைத் துயிலெடை செய்தற்கு நாவலர் பெருமான் பெருமுயற்சிகள் செய்து அருளினர்.

இன்று பல்வேறுவகையில் சைவத்துக்குத் தாக்கங்கள் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன. நாவலர் பெருமானிருந்தால், அவரது முயற்சிகள் பல்வேறு வகையில் அமைவதோடமையாமல், 'ஈழநாட்டுச் சமயநிலை' என்று ஒரு புத்தகமும் வெளிவந்திருக்கும். இவ்வாருயதொரு நிலை கைகூடாத பொழுதும், நாவலர் பெருமானின் ஆத்மசக்தி ஸ்ரீ-ல-ஸ்ரீ தத்புருஷதேசிகர் அவர்களை, சைவபரிபாலன சபையின் மூலம் இந்த நாட்டுக்கு உபகரித்திருக்கின்றது.

தேசிகர் அவர்கள் நாவலர் பெருமான் அவதரித்த யாழ்ப்பாணத்தை இராசதானியாக்கி, ஈழ நாட்டின் முக்கிய இடங்களுக்குத் திக்குவிஜயஞ் செய்து பிறழ்வு நெறிகளை அஞ்சாது தலைநிமிர்ந்து கண்டனங்கள் செய்து, சைவத்தனியரசை நாட்ட நன்முயற்சிகள் செய்திருக்கிருர்கள். மூன்றுமாச காலம் அவர்களது நன்முயற்சி நடந்திருக்கின்றது.

உபந்நியாசத்திலும், தீட்சையினுலும், சித்தாந்த வகுப்பாலும் தேசிகர் அவர்கள் இந்த நூற்ருண்டில் இங்கே செய்த சேவை, சைவசமய சரித்திரத்தில் என்றும் நிலவுவதாயிருக்கும்.

சீர்திருத்தக்காரர்கள் எதைப் பிறழ்வு என்று கருதுகின்ருர்களோ, அது எந்த மூலதத்துவத்தின் பிறழ்வு என்று அறியாத வழி, அவர்கள் செய்யும் திருத்தமும் பிறழ்வுகளில் ஒன்ருய் விடும் என்பது தத்துவஞானி ஒருவரின் கருத்து.

தேசிகர் அவர்கள் போதிக்குந் திருத்தங்கள், மூலதத்துவத்தை உணர்ந்து அதற்கு மாறின்றி இருப்பவைகள்! ஞானிகளுக்கும் ஞான சாத்திரங்களுக்கும் உடன்பாடானவைகள்.

இவ்வாற்ருல் தேசிகர் அவர்கள் நமது நாட்டுக்கு என்றும் இன்றியமையாதவர்கள். அவர்களுக்குப் பிரியாவிடை அளிப்பது புத்தியாகாது.

பிரிவைப் பாலை என்று சொல்லுவது பொருளிலக்கண வழக்கு. பிரிந்து சென்ருர் வரவைக் காத்திருப்பது முல்லை எனப்படும். இப்பிரியாவிடை முல்லையாய் அமைய வேண்டும்.

ஆடுஉக்களிலும், மகடூஉக்களிலும் விரல்விட்டு எண்ணத்தக்க ஒரு சிலராவது, சிவஞானபோதத்தில் எட்டாஞ் சூத்திரத்தில் வரும்.

"தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்த"

என்ற தொடரின் பொருளைச் சிந்தித்துத் தெளிந்து, சாதகநிலை தலைக்கூடுவராயின், தேசிகர் அவர்கள் நாம் நினைக்கும் போதெல்லாம் நமக்குத் தரிசனம் அளித்து நல்லுபதேசம் செய்து வைப்பார்கள்; நாவலர் பெருமானுக்கு நாட்டுஞ்சிலை வாய் திறந்து பேசுவதாயுமிருக்கும்.

— இந்துசாதனம் (12—7—68)

மணிவிழா மலர்க் கட்டுரை



# விழா நாயகர் அவர்களுக்கு ஒரு விண்ணப்பம்



குருவே வணக்கம்.

'யாழ்ப்பாண மண்ணிலே ஒரு நல்ல வித்தை நம்பி வித்துதல் செய்யலாம்; என்ருயினும் ஒரு காலத்தில் அவ்வித்து முளைகொண்டு வளர்ந்து விளைவு தரும்' என்று பெரியார் ஒருவர் கூறிய வாக்கொன் றுண்டு.

யாழ்ப்பாண மண்ணின் அடித்தளத்தில் நல்லதோரூற்று இருக்கின்றது; அது கந்தபுராண ஊற்று. அந்த ஊற்றைப் பகிரங்க யாழ்ப்பாணத்திற் காணமுடியாதா யினும் கிராமங்களாகிய அந்தரங்க யாழ்ப் பாணத்திலே அதனைக் கண்ணிறையக் காணலாம். கந்தபுராணம் என்னும் நித்திய கன்னிகையின் புக்ககம் யாழ்ப்பாணம்.

ஒரு காலத்திலே கிறிஸ்தவ சண்ட மாருதம் சவிமடியும் பொருட்டு, தன் ஏகபுத்திரனை அந்த நித்திய கன்னிகை நமக்கு அருளினள். அந்த நித்திய கன்னிகை ஒவ்வொரு தாய் தந்தையின் உதிரத்திலும் கலந்திருக்கின்ருள். அன்று அவள் அருளிய ஏகபுத்திரர் ஆறுமுக நாவலர் பெருமானே யாவர்.

இன்று ஏகான்ம வாதமாகிய மாயாவாத சண்டமாருதம், வேதாந்தம் என்ற பெருமைவாய்ந்த பெயரைத் தரித்துக் கொண்டு, முன்னெரு காலத்திலே பௌத்தத்தைப் புறங்கண்டது, இக்காலத் திலே அதனேடு தோழமை பூண்டு, தோளோடு தோளிணைந்து, பருமரங்களை யெல்லாம் முரிவு செய்து, வெகு வேகமாக எங்கும் பரவி வருகின்றது. சினிமா நிலையங்களும், கல்வித்தானங்களும், புதிய சிருட்டிகளான பத்திரிகைகள் புத்தகங்கள் என்பவைகளும், இன்னேரன்ன பிறவும், உலகாயதக் கரங்களை நீட்டி, மாயாவாத மாருதத்தை வரவேற்கின்றன. இந்தச் சந்தர்ப்பத்திலே கடவுளுடைய பெருங் கருணை தங்களிடமாக எங்களுக்கு வெளிப் பட்டிருக்கிறது.

சிவஞான சித்தியார் என்கின்ற தெய்வீக சிந்தாமணியை மாயாவாதம் என்கின்ற பாசி படருகின்ற யாழ்ப்பாணக் குட்டத்திற் போகட்டிருக்கின்றீர்கள். சைவ சித்தாந்தம் என்கின்ற ஞானச்சுடர் விளக்கைத் தூண்டி அதன் பிரகாசத்தை எமக்குச் சற்றே புலஞ் செய்திருக்கின்றீர் கள். கந்தபுராணக் கண்ணினலே காணக் கூடியதாய் அது பிரகாசிக்கின்றது.

'நகரம்' என்ற சொல் எழுத்து நிலேமாறி 'நரகம்' ஆயிற்று என்பது ஒரு நவீன ஆராய்ச்சி. நகரம் தங்கள் அருமையை அறியாதிருப்பினும் கிராமங்கள் அறிய வல்லன. அவைகள் கந்தபுராண கிராமங்கள். அக்கிராமங்கள் தங்கள் வருகையை எத்தனை முறையுங் கரங்களை நீட்டி வரவேற்றபடியே இருக்கும்.

குருவே,

கிராமங்கள் வாயிலாக இந்த யாழ்ப்பாணத்திலே - நாவலர் பெருமான் அவதரித்த மண்ணிலே — சைவசித்தாந்தத் தனியரசை நாட்டுங்கள்.

'புத்தி' என்னும் அந்தக்கரணம் தங்கள் உபநியாச உபதேசத்தினுலே தெளிவு அடைவதாகுக.

'அகங்காரம்' என்னும் அந்தக் கரணம், தங்கள் தீக்ஷையினுலே பக்குவம் எய்தி 'மானம்' என்கின்ற அருமந்த மணியைப் பேணுவதாகுக.

'உபதேசம்' 'தீக்ஷை' இரண்டும் ஒருங்கு கைகூடுவதற்கு, 'மனம்' என்னும் அந்தக்கரணம், மாசு நீங்கித் தவம் புரிவதாகுக. தவத்தைப் பெருக்கும் ஔஷதமாகக் 'கந்தபுராணம்' திகழுக.

திரிகரணங்களையும் ஓம்படை செய்து தங்களைப் பிரார்த்திப்போமாக. சைவ சித்தாந்த கற்பகதருவை யாழ்ப்பாணத்தில் நாட்டி, வருடந்தோறுஞ் சமூகஞ் செய்து, அன்புநீர் பாய்ச்சி அதனை வளர்த்தருளுதலே வேண்டுகின்ருேம்.

வணக்கம்.

சித்தியார் வகுப்புக்காக,

சி. கு.

நாவலர் சைவப் பிரகாச வித்தியாசாலை
யாழ்ப்பாணம்.

நன்றி. "இந்துசாதானம்"

- மணிவிழா மலர்க் கட்டுரை





# விழா நாயகரைப் பற்றி ஒரு விஞ்ஞாபனம்!

பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்கள்

யாழ்ப்பாணத்தில் நாவலர் சைவப் பிரகாச வித்தியாசாலையிலே, நாடோறும் மாலை ஐந்து மணி தொடக்கம் சைவ சித்தாந்த வகுப்பொன்று நடந்து வருகிறது. தேசிகர் அவர்கள் நடத்தி வருகின்றூர் கள். அமிர்த பொக்கிஷமான சித்தியார் பாடம் நடக்கிறது.

நாவலர் வித்தியாசாலையோடு ஐம்பது வருஷத்துக்கு மேற்பட்ட தொடர்பு எனக்குண்டு. 1917 கார்த்திகை தொடக்கம் 1927 புரட்டாசி வரை மேற்படி வித்தியாசாலையிலேயே வசித்து வந்தேன். மேலும் 1938 வரை நெருங்கிய தொடர்பு இருந்தது.

சைவ சித்தாந்தப் பேரறிஞரான சபாரத்தின முதலியார் அவர்கள் முதிர்ந்த பட்டதாரிகளுக்குச் சைவ சித்தாந்த பாடம் நடத்தியதும், சைவ சித்தாந்த சமாஜம் வருடந்தோறும் நடந்து வந்ததும் நான் கண் குளிரக் கண்டவை.

அங்கே நடந்த, நடக்கின்ற வைபவங்களுள், நாவலர் பெருமான் சாந்தி எய்தி மனப்பூர்வமாக ஆசி வழங்குவதொரு வைபவம் உண்டேயானுல், அது தேசிகர் அவர்கள் மேற்கண்ட வகுப்பை மரபுநெறி பிறழாது நடத்தும் வைபவமாயே இருக்கும் என்பதை எனது எழுபதாம் வயசில் தெட்டத்தெளியத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

மகான் செந்திநாதையர் நாவலர் வித்தியாசாலையில் எட்டு வருஷம் தலைமை உபாத்தியாயராயிருந்தவர்; நாவலர் செய்த பிரசங்கங்களை எழுத்துத் தவருமல் எழுதிக் கொண்டவர். அவருடைய பெயரை ஈசான சிவாசாரியார் அவர்கள் உச்சரிக்கும் போது நாத்தழுதழுப்பதையும் கண் கலங்கு வதையும் நாம் பல முறை நேரே கண்டிருக் கின்றேம். அப்படிப்பட்ட சிவாச்சாரிய சுவாமிகளிடம் முறையாகப் படித்துத் தீக்ஷைகளும் ஆசாரியாபிடேகமும் பெற்ற வர்கள் தேசிகர் அவர்கள். ஞானப்பிரகாச ருக்கும் பிறகு, தாய் நாட்டுக்குச்சென்று அரும்பெருந் துறவிகளாய், சைவ சித்தாந்த அநுபவ ஞானிகளாய் ஒழுக்க சீலர்களாய் விளங்கியவர்கள் இருவர். ஒருவர் இலக்கணம் சுவாமி; வண்ணர் பண்ணையைச் சேர்ந்தவர். மற்றையவர் செப்பறைச் சுவாமி; வரணியை அடுத்த மந்துவிலைச் சேர்ந்தவர். இருவர் சுவாமிகளோடும் நெருங்கிய தொடர்பு படைத்தவர்கள் தேசிகர் அவர்கள். தேசிகர் வழி, நாவலர் வழி. தேசிகர் ஞான பரம்பரையால் நமது யாழ்ப்பாணத்தவரேயாவர்.

சைவ சித்தாந்தச் செல்வரான சொக்கலிங்கச் செட்டியார் நாவலரின் உத்தமோத்தம சீடர். அவர் சீடர் தேசிகர் என்பதும் நினைவு கூரற்பாலது.

நாவலர் வித்தியாசாலையில் சுன்னாகம் அ. குமாரசுவாமிப் புலவர் அவர்கள் தலைமையில் சிறந்ததொரு காவிய வகுப்பு நடந்து வந்தது. அவ்வகுப்பின் கடை மாணவன் நான். 1922-ல் புலவர் அவர்கள் மறையக் காவிய வகுப்பு ஒடுங்கியது. நான் கலங்கவிழ்ந்த நாய்கன் ஆயினேன். என்நிலைமைக் கிரங்கிப் புலவர் அவர்களின் இடத்துக்கு வித்துவான் ந. சுப்பையா பிள்ளை நியமிக்கப்பட்டார். அவர் சேனாவரையம் முதலிய கடின இலக்கணங்களையும் தருக்க சங்கிரகம் அன்னம்பட்டீயத்தையும் எனக்குப் பாடஞ் சொன்னார். பரீட்சையிற் சித்தி எய்தினேன். அது நிற்க.

வித்துவான் அவர்கள் சிதம்பரம் நாவலர் வித்யாசாலையில் முறையாகத் தமிழும் சமஸ்கிருதமுங் கற்றவர். இங்கே நூற்றுக் கணக்கில் பண்டிதர்களை உற்பத்தி செய்தவர். வித்துவ சிரோமணி கணேசையர் அவர்கள் இலக்கண விஷயங்களில் வித்துவான் அவர்களின் கருத்தை அறிவதுண்டு. இப்படிப்பட்ட வித்துவான் அவர்கள், தேசிகர் அவர்களின் சித்தியார் வகுப்பில், வெகு சிரத்தையுடன் கலந்து கொள்வதைக் கண்டதும் எனக்கு உள்ளங் காலிலிருந்து உச்சிவரை குளிர்ந்தது. ஆங்கிலத்திலும் தமிழிலும் நல்லறிவு படைத்த பெண்மணிகள் பலர் வகுப்பில் தவறாது பங்குபற்றுகின்றார்கள். இதற்கு மேலே வகுப்பின் இன்றியமையாமையையும் பாடஞ்சொல்லுந் திறமையையும் எடுத்துச் சொல்லவேண்டியதில்லை. தேசிகர் அவர்களின் வருகை யாழ்ப்பாணத்தின் வரப்பிரசாதம்.

நாவலருக்கு ஒன்று செய்யவேண்டும் என்பவர்களும், சைவ அபிமானிகளும், சைவ சமய பாடங்கற்பிக்கும் ஆசிரியர்களும், பண்டிதர்களும் இவ்வகுப்பிற் பங்குபற்றி இதனை நிலைபெறச் செய்யக் கடவர்கள்.

சித்தியாருக்குப் 'பின் இருபா இருபஃது நடக்க வேண்டுமென்பது எனது அவா. பதினான்கு சாத்திரங்களையும், சிவஞான பாடியத்தையும், திருமந்திரம் உள்ளிட்ட திருமுறைகளையும் தேசிகர் அவர்கள் தொடர்ந்து நடத்துவதற்கு, யாழ்ப்பாணத்துச் சைவமக்கள் முன் வந்து ஆவன செய்ய வேண்டும். அதுவே நாவலர் பெருமானுக்குச் செய்யும் நன்றிக் கடனாகும்.

தொடர்ந்து சிலகாலம் தேசிகர் அவர்கள் இங்கே வசிக்க உடன்படுவார்களாயின், உடன்படச்செய்ய முடியுமாயின், 'மிண்டிய மாயாவாத மென்னுஞ் சண்ட மாருதம்' மலய மாருதமாய் மாறும்; 'உலகாயதன் எனும் ஒண்டிறற் பாம்பின் கலாபேதத்த கடுவிடம்' நீலகண்டத்தைச் சேரும்.

'இது நல்ல சமயம்! இனி வாய்க்காது சமயம்!' என்பது நாவலர் பெருமானின் வாக்கு.

— நன்றி. ''இந்துசாதனம்''

— மணிவிழா மலர்க் கட்டுரை



# நம் விழா நாயகர்

★ பழ. சண்முகம் செட்டியார்
தில்லையம்பதி.

இக்கட்டுரை ஆசிரியர் பர்மியத் தலைநகரான ரங்கூனில் தொழில் நிமித்தமாக பல ஆண்டுகள் வசித்தவர். ஜீவகாருண்யத்தை குறிக்கோளாகக் கொண்டு அவ்விரதத்தை மேற்கொண்டு வாழ பலரை நிலைநிறுத்தியவர். நம் முத்துவிழா நாயகரிடம் சமய விசேட நிர்வாண தீட்சைகள் பெற்று மனைவியார் சிவபதம் அடைந்தபிறகு முப்பது ஆண்டுகளாக துறவற நெறியை துறவற வேடமின்றி கடைப்பிடிப்பவர்.

— பதிப்பாசிரியர்

கடல்கடந்த இரங்கூன். முதல் தெரு 112/122 எண். முருகப் பெருமான் திருமுன்னர் தைப்பூச நிகழ்ச்சி. சொல்மாரி பெய்தது கொண்டல். கேட்போர் தம்மை மறந்திருந்தனர். சொல்பொழிந்த உள்ளமோ ''எத்தனை பேர் சமயதீக்கை முதலான படிகளுக்குத் தகுதி'' என்று சிந்திக்கும். அடிக்கடி பெய்த அருள் மழையில் அன்பர்களின் நெஞ்சக் குளங்கள் நிரம்பின. ''சைவக் கௌிறது படுக்க'', சிவவலை, வலை வாணனல் வீசப்பட்டது. சிக்கிய மீனங்கள் பரியில் போடப்பட்டன. தப்பியோடியன குறிப்பிலமர்ந்தன.

இவர்கள் வழிபாட்டில் உள்ளம் பறிகொடுத்தோர் பலர். தங்கள் தங்கள் உலகியல் குறைகளையும், வழிபாட்டில் உள்ள குறைகளையும் உள்ளதை உள்ளபடி இவர்களிடம் சொல்லி மாற்றம் வேண்டுவார்கள் அன்பர்கள். அனைத்திற்கும் திருமுறை ஆதாரங்கள் காட்டி, அக்குறைகள் நீங்க அந்தந்தத் திருமுறைத் திருக்கடைக்காப்பு, திருப்பாட்டின் பிடிப்புக்களை மந்திரமாக உணர்த்தி வழிபட்டு வரச்செய்தும், செல்வம், தொழில் பெருக்கிக் கொண்ட அன்பர்கள் பலர். திருமணம் நிறைவுற்ற அன்பர்களும் பிள்ளைப்பேறு பெற்றவர்களும்,

சூல்காக்கப் பெற்றுக் குறைவில்லாத மகப் பேறு பெற்றவர்களும், உடல் நலக்குறைவு தீர்ந்து சுகவாழ்வு பெற்றவர்களும் எண்ணில்லாதவர்கள். அடிப்படைப்பலம் திருவைந்தெழுத்தே (யக்ஷணி வித்தை அல்ல) விரைவினிலே பலன் காண வில்லையே என அவசரப்பட்டோருக்கு ஆறுதல் கூறி, மேலும் மேலும் அழுத்தமாகத் தொடருமாறு வற்புறுத்திப் பயன் பெறச் செய்வார்கள்.

"இக்காலப் பயணமே ஒருஃபைபல் பாக்ஸில் (சிறு பெட்டியில்) வைத்து ஒரு கால் குழாய், ஒரு பனியன் ஒரு டெர்லின் சட்டை இரவிலும் பகலில் வீட்டிலும் உடுப்பதற்கு ஒரு கயிலி இவையுடன் அயலூர் போக்கு வரத்து முடிந்துவிடுகிறதே. நீங்கள், சிவபூசைப்பொருள்களும் பெட்டிகளும் இவ்வளவு வைத்திருக்கிறீர் களே, உங்களுக்குத் தகுதி முதலிய எல்லா வாய்ப்பும் இருப்பதால் அதுபொருந்தும். எங்களால் முடியுமா?" என்றால் வரும் பதில்:- "கேள்வி சரிதான். முகம் வழிப்புப் பெட்டி (Shaving Box) யை மறந்தா செல்கிறீர்கள். முகத்தூசு டப்பா (Pace Powder) இல்லாவிட்டால் ஊருக்குள் நுழையும் போது கடையில் வாங்கிச் சேர்த்துக்கொள்கிறீர்களே, ஆர்வம் தான் எதற்கும் காரணம்" என்று மின்னல் போன்று பளிச்செனச் சொல்லி பிசிறில்லாமல் விளக்குவார்கள். சொல்லுக்கேற்ப ஒரு சிறு கூசாச்செம்பில் சிவபூசைப் பொருள்களை அடக்கிக்கொஞ்சமேனும் சுமையில்லாமல் பெற்றுக்கொண்டவர்களில் பலர் நாளாக ஆகத்தமிழ் வள்ளல் சிவத்திரு சேவு. மெ. அவர்களின் வழிபாட்டுப்பொருள் களின் அளவில் பாதி, முக்கால் பங்குவரை வளர்த்துக்கொண்டிருப்பதை நானறிவேன். இவர்களை என்ன ஐயா இப்படி வளர்த்து விட்டீர்களே கூசாச்செம்பு எங்கே என்றால்: அழியும் இவ்வுடலுக்கும், வாழ்வுக்கும் எவ்வளவு தேட்டம், எவ்வளவு சுமை எவ்வளவு விரிவு செய்கிறோம். அழியா மெய்நிலைக்கு, மெய்த் தேவனுக்கு என்னசெய்யக் கூடாது. பொருளனைத்தும் அவன் தந்ததன்றோ. என்ன செய்தாலும் அவனுடைய பெருங்கருணைக்கு ஈடாகுமா? கூசாவிலடக்குவது வெட்கமாயிருக்கிறது. எல்லா உடைமைகளையும் கொடுத்த அவ்வள்ளலுக்கு என்ன செய்தாலும் அமைதி ஏது! என்று அநுபவ ஞானம் பேசுகிறார்கள்.

தேசிகர் பெருமானுடைய சிவஞான உறைப்புக்கண்டு உற்றாரும் மற்றாரும் இவர்களைக் குருபீடம் ஏற்கமுன்னர் நேமங் கோவில் சிவபூசை விழாவில் வற்புறுத்திய போது மறுத்து விட்டார்கள். பின்னர் கடல் கடந்த மலேசியாப் பயணம் குறிப்பிடப் பெற்றதும் அயல் நாட்டிலுள்ள தமிழர் சமயம் பல்வேறு நிலையில் துண்டாடப் பட்டிருப்பதை அறிந்து, அதனை மாற்றுவான் வேண்டி, ஞானபீடம் (ஆச்சாரிய அபிடேகம்) ஏற்றார்கள். இளஞாயிறு செவ்வொளி வீசத்தொடங்கியது. பிறப்பால் மட்டும் உயர்வு தாழ்வு இல்லை என்ற நெறியுணர்ந்த இவர்களின் ஞானாசிரியப் பெருந்தகைத் தந்தையார் எம்மனோரின் தாத்தாவாம் (ஞானபரம்பரை உறவு) பழநி சைவசித்தாந்தச்சரபம் சிவாச்சாரிய மூர்த்திகள், தம் மக்கட்கு திருநாவுக்கரசு என்றும் மெய்கண்டான் என்றும் பெயர் சூட்டியதோடல்லாது, சிவபூசையின் அங்க மாகவுள்ள அழலோம்புவதை வேதியர் குலத்தில் வாராதவர்களுக்கு இன்மை செய்துவரும் பொருளற்ற மரபை முறியடித்து இவ்வாசிரியப் பெருந்தகைக்கு எரியோம்புதல் முதலியனவற்றை எழுந்தருளுவித்தார்கள். இவர்களும் அவ் வாறே தகுதிகருதிச் சீடர்களுக்கு எரிஓம்பலை எழுந்தருளச் செய்துவருகிறார்கள். இதனால் பலரிடம் கலிமெலிந்து அஞ்சிப் போவது கண்கூடு. கற்றாங் கெரிஓம்பி வளர்வதும் சிறப்பாகி வருகின்றது.

இவர்கள் சிவபரத்துவம் சொல்லும் வேளையில் எவ்வளவு நேரமாயினும், நேரமாக ஆக முதுகெலும்பு (Spinal Cord) நிமிர்ந்து முகமண்டலம் ஒளிவிடுவதை உற்று நோக்கியவர்கள் குண்டலினி ஆற்றல் (Serpent Power) தலை நிமிர்ந்து வளரு கிறது எனக்கருதுகிறார்கள். இவர்கள்

எழுந்தருளும் இல்லங்கள் தோறும் சிவமணம் கமழும் என்ருல் இவர்கள் இல்லத்தைப் பற்றிக் கூறவா வேண்டும்? தெருவே சம்பந்தர் தெரு. இல்லமோ பாலருவாயர் நிலையம், திருமுகப்போ, பேரருட் குழந்தையின் அருள்ஞானம் பொலிந்த நிழலோவியத்தால் வண்ணம் செய்தவாறு ஒளி விடுகிறது.

இவர்கள் இல்லத்தில் நிரந்தரமாக வேதிகையும் ஓமகுண்டமும் காட்சியளிக்கும். சாதாரண நாளிலேயே இல்லம் திருமட மாகவோ ஆலயமாகவோ காட்சியளிக்கும். தீக்கை நாளில் அளவிட முடியுமா அருள் நிலையை?

இரங்கூனில் தொடர்ந்த, ஓய்வு இல்லாத சொற்பொழிவால் உடல்நலம் சிறிது குறைந்தது. மருத்துவம் நடை பெற்றது. உடம்பைப் பரிசோதிக்கப் பல மெல்லிய சிறுமயிரிழை போன்ற குழாய்கள் (Wire) இயந்திரத்திலிணைக்கப்பட்டன. இயந்திரத்திலிருந்து நீண்ட நீண்ட கட்ட மிட்ட காகிதச் சுருள்கள் (Graph Paper) தேர்வடம் போன்று நீண்டுவெளிவரும். அதில் கோலங்கள் போலப் பல கீறல்களும் கோடுகளும் வடிவெடுக்கும். அதை யெல்லாம் கண்டு மருத்துவர் ஏதேதோ செய்தார். ஓய்வு வேண்டுமென்ருர். ஓய்வு எப்படிக் கிடைக்கும். மருத்துவரும் சொற் பொழிவு தோறும் உடனுறைவர். இவருக் கும் மேடையிலே தனி நாற்காலியுண்டு. இவர் உடனுறைவதால், நோய் மிகுதி என்று பிறர் ஐயுறுவர். சந்தேகித்து மருத்துவரைக் கேட்டால் 'ஐயா, இவர் களுக்கு நோய் ஒன்றும் செய்யாது. எந்த நோயும் தீண்டாது. காரணம், திருநீறு சண்ணித்த திருமேனி' என்பார். அப்படி யானுல் ஏன் உடனுறைகிறீர் என்ருல் சொற்பொழிவுக்கல்லவோ வருகிறேன் என்பார். உங்கட்கு மொழி தெரியாதே என்ருல் சொற்பொழிவின் சாரத்தை இரத்தினச் சுருக்கமாகச் சொல்லி விடுவார். இவர் ஒருவங்காளி. ஆங்கில எழுத்துக்களில் பாதிக்கு மேல் 17, 18, எழுத்துக்கள் இவருக்கு விருதாகப் பறை சாற்றி நிற்கும். மெல்லெனப் பேசுவர். சர்க்கார் பெரும் பதவியாளர்களுக்கு மருத்துவம் புரியும் வல்லுனர்களில் இவரும் ஒருவர். இவர் பெயரே டாக்டர் சர்க்கார். அமைதியான முகமுடையவர். கல்வித் திருவும் செல்வத் திருவும் இயல் பாகப் பெற்றவர். முத்தித் திருவுக்கு விழைபவர். பெரியதோர் விமானம் போன்ற ''இம்பாலா'' மோட்டார்கார் இவருக்கு உண்டு. இந்த ஊர்தியில் வந்து தேசிகர்பெருமகனுரைச் சொற்பொழிவுக்கு ஏற்றிச் செல்வர். கூர்ந்து சொற்பொழிவு களை நோக்குவர். தேசிகர் பெருமான் தாயகம் திரும்பும் போது பெரியதோர் விருந்துபசாரம் செய்தார். அந்த லட்டுகளையும், ஜிலேபி, பாயாசத்தையும் நினைத்தால் வாயூறுகிறது இப்போது. வெள்ளித் தாம்பாளங்களில் உணவு படையல். பொற்காசுகளைப் பாதகாணிக்கை யாக வைத்தார். மருத்துவத்துக்கு நம்மிடமிருந்து பெறுபவர் அதற்கு மாற்ற மாக ஏதேதோ செய்தார்.

ஈழ நாட்டு யாழ்ப்பாணத்தில் ஒரு நிகழ்ச்சி. யாழை அடுத்த ஒரு தீவு. ''புங்குடுதீவு'' என்பது அதன் பெயர். சிவ பரம் பொருளுக்குப் பெரு விழா நடை பெற்றது. (பிரம்மஉத்சவம்) 10 நாளும் பெரியபுராணச் சொற்பொழிவுகள். கடலில் வலை வாணனுக வந்தது போக இப்போது காட்டகத்து வேடனுகக் காட்சிகொடுத்தார் கள் உள்ளப்பாங்கில். முன்னர் மீன்வலை வீசியவனுன இப்போதைய கானவன் அம்பில் எய்யப்பட்ட சிவக் களிறுகள் பலர். உடனடியாகத் திக்ஷைக்கு நாள் குறிக்கப் பட்டது. காலை 7 மணிக்குத் தீக்ஷை தொடங்கியது. மாலை 4 மணிக்கு நிறை வெய்தியது. சாதகம் செய்தோர் உட னுறைய முடியவில்லை. பசியும் ஓமப்புகை யும் மிகை. ஞானசிரியர் பெருந்தகை போட்ட கால்கள் கூட மாற்ருமல் ஓவியம் போல அமர்ந்தபடியே இறுதிவரை யிலிருத்து ஒரேயடியாய்த் தீக்ஷை முடித்து 4½ மணிக்குத் தேநீர் மட்டும் அருந்தினர். வியப்புக்குரிய ஆற்றல்; அவர்கள் திருமுகம் இடையிடையே சீடர்கள் மாற்றும் போது, போடப்பட்டிருந்த கவச ஆடை (ஆசிரியரும் சீடர்களும் உபதேச காலத்தில் போட்டு

மூடும் பட்டாடை) நீங்கும் போது மட்டும் கண்கள் மூடிப்புலனுகும்.

இந்தக் காட்சிகள் கண்டநுபவித் தவை. முகமனல்ல. சிவ தீக்கைகளில் பத்ததி எல்லோரும் கேட்கத் தமிழில் வாசிக்கப் பெற்று ஆங்காங்கே குறிப்புக் களும் பொருள்களும் சொல்லப் பெற்று அதற்குரிய திருமுறைகள் ஊற்றெடுத்துப் பிரவாகமாகிப் பொங்கும். நிருவாண தீக்கையில் சீடனின் ஆன்மாவை முதல் நாளிரவு வேதிகையில் சிவ பரம் பொருளின் திருவடியில் வைத்து

நாயிற் கடை ஆம் நாயேனை
நயந்து நீயே ஆட் கொண்டாய்
மாயப் பிறவிஉன் வசமே
வைத்திட்டு இருக்கும் அது அன்றி
ஆயக்கடவேன், நானோ தான்?
என்னதோ, இங்கு அதிகாரம்
காயத்து இடுவாய், உன்னுடைய
கழல்கீழ் வைப்பாய் கண்ணுதலே!

என்ற மணிவாசகப் பொந்துத் தேன் பிலிற்றல் சுவைத்துணர நிகழும்.

திரு முறைகளுக்குச் சான்று திரு முறைகளிலிருந்தே கொணரப் பெறல் வேண்டும். ஏனைய நூற்சான்று கூடா வென்பார்கள் நம் ஞானசிரியர் அவர்கள்.

நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் தன்னடக்கம் மிகுந்தவர்கள். தங்கள் பெருமையைத் தாங்களே வெளிப்படுத்தக் கூடாது என்ற நிலையில் பிற பெரியோர் களையே ஏத்தி வந்ததால் தங்கள் மரபை மறந்தே விட்டார்கள். இப்போது தங்கள் தங்கள் குலத்தில் வந்த மகான்களை இலக்கியப் பேராசிரியர்களை, செல்வந்தர் களை, அவ்வக் குலத்தாரே ஏத்திச் சிறப்புச் செய்யும் காலநிலையை ஒட்டி உணர்ந்து, நகரத்தார்களும் செய்து வரவேண்டும். இந்த முறையில் நமது ஞானசிரியப் பெருந்தகைக்குத் தக்க முறையில் விழா வெடுக்க முன்வந்திருப்பது போற்றற்குரிய தாகும்.

முத்துவிழாக் குழுவில் தக்கார்கள் பலர் இடம் பெற்றிருப்பது சிவசமயத் தார்க்குக் கிடைத்த பெரும் பேருகும். ''மன்னரும் முனிவரும் முன்னுவ பொன் ஞல் முடியும்'' என்ற மூதுரைக் கிணங்க இருதிறத் திருவுடையார்களும் தோள் கொடுப்பது பெருமகிழ்ச்சியைத் தருகின்றது.

அருள் தந்தை, சிவபூசை செய்ப வர்களிடம் ''பிராசாதநெறி'' வேர் விடவேண்டும் என்றும் அது அவரவர்கள் ஊற்றத்தால் ஊற்றெடுக்க வேண்டுமென்றும் அடிக்கடி அருளுவார்கள். (பிராசாதம் என்பதற்குச் சிவஞான கதியைத் தருவது எனப்பொருள் கூறுவர்) பிரா - சிவஞானம்; சா - கதி; தம் - தருவது. பிராசாதம் யோக முறைகளுள் ஒன்று.

சிவபூசையில் அந்தர்யோகம் ஊன்ற ஊன்ற இயல்பாகப் பிராசாத நெறி வளர்ந்து உணரப் பெறும் என்பது இக் கட்டுரைக் குரிய ஞானசிரிய வள்ளலின் உபதேசம்.

காட்டகத்து வேடனுகியும், கடலில் வலை வாணனுகவும் மிளிர்ந்த இவ் வருளாளர் இஞ்ஞான்று ''நாட்டில் பரிப்பாகனு''க இருப்பதை விட்டுவிடாமல் (மீனவனும் காண வல்லன் அல்லன் என்பது போன்ருகி விடாமல்) மூலபண்டாரம் வழங்குவதைப் பெற்றுய் வோமாக என்று கூத்தப்பெருமானின் எடுத்த பொற்பாதம் ஏத்தி மகிழ்வோமாக.

''உண்டுடுத்துப் பூண்டிங் குலகத்
தார் போற்றிரியும்
தொண்டர் விளையாட்டே சுகங்காண்
பராபரமே''

— தாயுமானவம்

— மணிவிழா மலர்க் கட்டுரை

# விழா நாயகரின் இளமை



திருவண்ணுமலை ஆதீனப்புலவர்

**பண்டிதர் மு. முத்து வேங்கடாசலமய்யர்**

பள்ளத்தூர்.

இக்கட்டுரை ஆசிரியர் விழா நாயகருடன் தமிழ் நெடுங்கணக்கில் இருந்து தொடர்ந்து பயின்று வந்தவர். மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் பிரவேசம், பாலபண்டிதம், பண்டிதம் ஆகிய தேர்வுகளில் வெற்றிபெற்று பள்ளத்தூர் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராய் இருந்து ஓய்வுபெற்றவர். செந்தமிழ்க் கவிகள் விரைந்து பாடுவதிலும், வடமொழி நூல்கள், சோதிடக்கலை முதலியவற்றில் நல்ல பயிற்சி உடையவர்.

— பதிப்பாசிரியர்



நமது மதிப்பிற்குரிய தேவகோட்டை சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர், பாலகவி, வயினாகரம் வே. இராமநாதன் செட்டியாரவர்களின் இளமை மாண்பை உடன் பயின்றவன் என்ற முறையில் இக்கட்டுரையில் வரைய மட்டற்ற மகிழ்ச்சியடைகின்றேன்.

கோநகர்க் கற்பக விநாயக கலாசாலை, செந்தமிழ்ச் செழுங்கலை நியமமாக ஒளி வீசிய காலம்; அதனுறுப்பாய் விளங்கிய ஞானசம்பந்த நற்சபையில் தமிழ்நாட்டுப் பெரும் புலவர்கள் ஆண்டுதோறும் வந்து அருஞ்சொற் பொழிவுகள் நிகழ்த்தி அறிவொளி யூட்டினர்; மற்ருேருறுப்பாம் வாணிமந்திர புத்தகசாலை அரும்பெரும் நூல்கள் நிறைந்த சீரிய நூல்நிலையம் ஆகும்.

இத்தகு முத்திறத்த நிறுவனங்களை நிறுவித் தமிழ் வளர்த்த பெரியார் திருவாளர் மகாதேவ முருகப்ப செட்டியார் அவர்கள். அவர்கள் எப்போதும் 'மஹாதேவ மஹாதேவ' என்றே கூறிவரும் இயல்புடையவர்கள். அத்தகு சான்ருேரின் தவப்புதல்வராக நம் பாலகவியவர்கள் தோன்றினுர்கள். அவர்கள் தோன்றியது ஆனந்த மார்கழி 26. சோதி நன்னுள்.

அடியேன் இல்லம் கலாசாலைக்கு மிக அண்மையில் அமைந்திருந்தது. அடியேனும் அதே ஆண்டில் பிறந்தவன் ஆதலின், நாங்கள் இருவரும் சிறு வகுப்பு முதல் உடன் பயின்று வந்தோம். நாங்கள் இணைபிரியாத் தோழர்களாகவும் இருந்து வருகிறோம்.

இவர் தினமும் அதிகாலையிலேயே வீட்டை விட்டுக் கலாசாலைக்கு வந்துவிடுவார். நானும் அதே நேரத்தில் கலாசாலைக்குச் செல்வேன். அங்கு இருவரும் பல்துலக்கி நீராடி நந்த வனத்திற்குச் சென்று மலர்கள் கொய்து வந்து கலாசாலையில் எழுந்தருளியுள்ள கற்பக விநாயக மூர்த்திக்கும் சமயகுரவர் நால்வர்க்கும் மாலைசூட்டிச் சாத்தி வழிபட்டுப் பின்னரே தத்தம் வீடு செல்வோம்.

''நிலைபெறு மாறெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன் முன்அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டு''

என்ற அப்பர் பெருமானது அருள் மொழியின் ஆழ்பொருளை அறியாத அவ்விளமைப் பருவத்திலேயே எங்கட்கு இவ்வழிபாடு வாய்த்தது பெரும் புண்ணியம் என்றே கூறல் வேண்டும்.

இளமையிலேயே இவர் ''தருப்பை நுனி'' எனக் கூர்த்த மதியினர்; இசையிலும் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தார். 'ஹார்மோனியம்' என்ற இசைக்கருவியில் இசைப் பாடல்களை வாசிக்கும் ஆற்றலுண்டு. திருஞானசம்பந்தப்பெருமான் திருவடிகளில் அளவற்ற ஈடுபாடு உடையவர். தேவக்கோட்டையில் தனக்கெனக் கட்டப்பெற்ற திருமனைக்கும் 'பாலருவாயர் நிலையம்' என்று பெயரிட்டனர்.

அப்பாலருவாயர் பால் முறுகி எழுந்த தியானத்தாலேயே இவர் ஞானக்கவிதைகள் பல மொழியும் ஆற்றல் கைவரப்பெற்றார்.

ஆதிசங்கரர் தாம்பாடிய 'சௌந்தர்யலஹரி'யில்

''தருணி தனத்தில் தழைந்திடு பால், சிந்தை தன்னில் உண்டாய்
அருள்வாழ் வளிக்கு மதுரக் கவியலை ஆழ்கடலே
பருகுங் கவுணியக் கன்றெனு மேகம் பவனடிக்கே
பெருகுமெய்ஞ் ஞானக் கவிதை மழைதனைப் பெய்ததுவே''

என்று திருஞானசம்பந்தர் பெருமையை வாயார வாழ்த்துகிறார். இவர் பிறந்து மொழி பயின்ற பின் எல்லாம் காதல் சிறந்து அம்மை ஞானப்பால் உண்ட ஆளுடைய பிள்ளையைத் தியானித்து மெஞ்ஞானக் கவிதைகள் பல வழங்கும் பேறு பெற்றார்.

இளமைப் பருவத்தில் என் பேச்சில் இடையிடையே பார்ப்பனர் பேசும் வடமொழிச் சொற்கள் பொருள் அறிந்தோ அறியாமலோ மலிந்து கிடக்கும்; உடனே இவர் அச்சொல்லைக் கேட்டுப் பொருள் யாது என என்னை உசாவுவார். நான் பொருள் அறியாது திகைப்பேன். இவர் அச்சொல்லை மறவாமல் நினைத்து வைத்துக் கொண்டு எவ்வாறே பொருள் தெரிந்து கொள்வர். எனக்கு இது பெருவியப்பை நல்கும். அத்தகு பேச்சில் 'ஈஷிக்கொண்டேன்' என்ற ஒரு சொல் இன்றும் என் நினைவுக்கு வருகிறது.

தொடக்கத்தில் கலாசாலைத் தலைமையாசிரியர் வித்துவான் ஸ்ரீ S. ஆழ்வாரையங்கார் அவர்களிடம் நாங்கள் தமிழிலக்கிய இலக்கணம் பயின்றோம். பின் நான் மதுரைத் தமிழ்ச் சங்கத்திற் சேர்ந்து கல்வி பயிலலானேன். பின்னர் இவர்கள் காரைக்குடி சொக்கலிங்க ஐயா அவர்கள் முதலானோரிடம் முறையாகச் சமய நூற்பாடங்கேட்டு, தேவக்கோட்டை வந்ததும் திருவாளர் பொ. முத்தையா பிள்ளை, பெரிய மைனர் உலகம்பட்டி இலக்குமண சுவாமி, கொரடாச்சேரி வாலையானந்த சுவாமி இலக்கணம் முத்துகுமார தம்பிரான் சுவாமி இவர்களுடன் அளவளாவி ஞான நூற்பரப்பின் நிலை கண்டுணந்தார்.

இவ்வாறு வரன் முறையாகச் செந்தமிழ் பயின்றார் ஆதலின் இவர் பிறர்க்குப் பாடஞ் சொல்லும் ஆற்றலும் எளிதே பெற்றனர்.

இவரது பத்திரிக்கைத் தொண்டும் பலர் பாராட்டும் பாங்குடையது; 'செட்டிநாடு' இதழ் ஆசிரியராய் இருந்த காலத்துக் கணக்கற்ற இலக்கிய சமயக் கட்டுரைகள் எழுதிச் சைவமும் தமிழும் தழைத்தினிதோங்க அரும்பணி செய்துள்ளார்.

15 வயதிலேயே குன்றக்குடிச் சுப்பிரமணியர் தோத்திரப் பதிகம் பாடும் திருவருள் பெற்றவர். உழுவலன்பால் அந்நூலை எளியேனுக்கு அனுப்பி என் சிறப்புப்பாயிரம் பெற்றார். ஒவ்வோராண்டிலும் தான் பிறந்த நாளில் ஒரு நூலை இயற்றி வெளிப்படுத்துவார். ஒவ்வோராண்டிலும் எளியேன் சிறப்புப் பாயிரமும் இடம்பெறும்.

ஆங்கீரச ஆண்டு கார்த்திகைத் திங்களில் அதாவது இவர்களின் 18 ஆவது வயதில் நடந்த ஒரு நிகழ்ச்சி இன்றும் நினைவில் இருக்கிறது.

மதுரையிலிருந்து நான் கோநகர் வந்திருந்த போழ்து ஒரு நாள் மாலை முருகன்மீது நான் பாடிய அஷ்டநாகபந்த வெண்பா ஒன்றையிவர்களிடம் கூறினேன். உடனே 'நாளை அதிகாலையில் நான் ஒருபாடலுடன் வருகிறேன்' என்று கூறி இல்லம் சென்று மறுநாள் காலையில் பொருள் வளமும் சொல்வளமுமிக்க அஷ்டநாகபந்த வெண்பா ஒன்று 'ஞான போனகர்' மேற்பாடிக் கொணர்ந்தார். பாடல் வருமாறு :

''சேறு மடியர் திகழ அருளுமே
யாரு மிருளு மகற்றுமே — மேறுவா
யேல நல மாமே யிடியிமை யோர் கூறு
பாலரு வாயர் பதம்'' என்பது.

மொழித் திறத்தின் முட்டறுத்து, முதற் நூற் பொருள் உணர்ந்து சிவா கம ஞான பானுவாய் விளங்கிய பழநி சிவஸ்ரீ ஈசான சிவாசாரிய ஸ்வாமிகள் அவர்களிடம் சமயதீக்ஷை, விசேடதீக்ஷை, நிர்வாணதீக்ஷை, ஆசாரிய அபிடேகம் ஆகியன பெற்றுத் தம்பால் அணையும் அனைவர்க்கும் திருவைந்தெழுத்தை உச்சரிக்குங் கேண்மை உணர்த்திச் சிவ பூசையில் ஈடுபடுத்தும் பெருமாண்புமிக்கவர் இவர்.

குன்றக்குடியில் நடந்த சைவர் மாநாட்டுத் தலைவர்க்கும், சைவ மாதர் மாநாட்டுத் தலைவியர்க்கும் அடியேன் வரவேற்பிதழ் பாடியளித்தேன். பல ஆண்டுகட்கு முன்னர்க் குன்றக்குடியில் நடந்த சைவ இளைஞர் மாநாட்டுக்குத் தலைமையேற்ற எனக்கு அன்பர் பாலகவி அவர்கள் சிறந்த வரவேற்பிதழ் பாடியளித்தார். இஃது அவர்களின் 'அடக்க முடைமை'ப் பண்பிற்கு நல்ல எடுத்துக்காட்டு.

சொற்பொழிவாற்றும் வேளையில் இவர்களின் இனிய குரலும், பொருள்களை அலசி விளக்கும் தோரணையும் அகஸ்மாத்தாகக் கேட்பவர்களையும் காந்தத்தைப்போல் இழுக்கும். திருச்சி, திருநெல்வேலி, புதுக்கோட்டை, கோவை முதலிய பல பெருநகரங்களில் தொடர்ந்து பாட வகுப்புக்களைத் திறம்பட நடாத்திப் பெரும்புகழ் அடைந்துள்ளார்கள்.

இளமைத்தோழர், உழுவலன்பர் பாலகவி அவர்கள் சைவத்துக்கும் தமிழுக்கும் தொடர்ந்து பெரும் பணியாற்றிப் பல்லாயிரவரைச் சிவபூசையில் ஈடுபடுத்தி ஆயிரம் பிறையை அழகுறக்கண்டவரை பல்லாண்டு பல்லாண்டு வாழ்க எனக்கச்சியை இச்சித்த காமக் கொடியின் கழலிணை மலர்களை மனம் மொழி மெய்களால் வாழ்த்தி வணங்குகிறேன்.

— மணிவிழா மலர்க் கட்டுரை



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

## ★: குரு வாழ்த்து :★

அன்பாக மந்திரங்கள் சொல்லி அவனிமிசை
வன்பாய நோய்ப்பிறவி வாரா வகைகாட்டி
இன்பான எம்மான் எழில்காட்டும் எம்குரவன்
பொன்பாரில் வாழ்க பொலிந்து.

**A. இராஜாஜி**
தலைவர், சதாபிஷேக முத்துவிழா
மற்றும் குருவார இறைவழிபாட்டுக்குழு
வெள்ளக்கோவில் - 638 111.

# வயிநாகரம் குடும்ப வமிசாவளி

## வயி. நாக. ராம. இராமநாதன் செட்டியார்.

- நாகப்ப செட்டியார் (1820-1882)
  - இராமநாதன் செட்டியார்
    - நாகப்ப செட்டியார்
      - சிதம்பரம் செட்டியார்
        - நாகப்ப செட்டியார்
          - நாகப்பன்
        - சோமசுந்தரம் செட்டியார்
          - லெட்சுமணன்
          - சிதம்பரம்
          - சுப்பிரமணியன்
          - சொர்ணமூர்த்தி
    - வேங்கடாசலம் செட்டியார்
      - *இராமநாதன் செட்டியார்
        - மகள் மீனாட்சி சொக்கலிங்கம் செட்டியார்
          - மகள் மீனாட்சி சோமசுந்தர இராமநாதன்
- வேங்கடாசலம் செட்டியார் (1822-1888)
  - இராமநாதன் செட்டியார்
    - சோமசுந்தரம் செட்டியார்
      - கருப்பன் செட்டியார்
        - சோமசுந்தரம் செட்டியார்
          - கருப்பன் செட்டி
      - இராமநாதன் செட்டியார்
        - சோமசுந்தரம் கருப்பன் செட்டி
- அண்ணாமலை செட்டியார்
  - இராமநாதன் செட்டியார்
    - நாகப்ப செட்டியார்
      - இராமநாதன் செட்டியார்
        - நாகப்பன் வேங்கடாசலம்
      - வேங்கடாசலம் செட்டியார்
        - நாகப்பன் சோமசுந்தரம் இராஜாராம்
  - வேங்கடாசலம் செட்டியார்
    - சுப்பிரமணியன் செட்டியார்
- சுப்பிரமணியன் செட்டியார்
  - லெக்ஷுமணன் செட்டியார்
    - நாகப்ப செட்டியார்
      - லெட்சுமணன் செட்டியார்
        - நாகப்பன்



* முத்துவிழா நாயகர்

# சிறு விளக்கும் தீப்பந்தமும்



தேவகோட்டை நகரத்தார் உயர்நிலைப் பள்ளியில் ஆண்டு விழா நிகழ்ந்தது. அதற்கு முத்துவிழாச் செல்வரும் சென்றிருந்தார். விழாவில் சிறப்புரை ஆற்ற வந்திருந்தவர், கரந்தைக் கவியரசு. வேங்கடாசலம் பிள்ளை. அவரை வரவேற்ற உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியர், பிள்ளையவர்களின் பெருமையினைக் கூறக்கருதி ' நம் ஊர்ப் பாலகவி அவர்கள், வேங்கடாசலம் பிள்ளையிடம் இலக்கியம் கற்ற மாணவர் என்றால், பிள்ளையவர்களின் சிறப்பினைச் சொல்ல வேண்டுமா ?'' என்று குறிப்பிட்டார், பிள்ளையவர்கள், தம் சொற்பொழிவில், '' திருவிழாவில் தீப்பந்தம் ஏந்திச் செல்வார்கள். அகலிடத்தையும் ஆண்டவனின் திருமுகப் பொலிவையும் விளக்கமாகக் காட்டி, ஒளி வீசி விளங்குவது தீப்பந்தம். அதை ஒரு சிறு விளக்கில்தான் கொளுத்திக் கொள்கின்றார்கள். பாலகவி, தீப்பந்தம் போன்றவர். நான் சிறு விளக்குப் போன்றவன் '' என்று நயமாகக் கூறித் தமது அவையடக்கத்தைப் புலப்படுத்தினார்.

# நோட்டும் ரொக்கமும்



நம் முத்துவிழாச் செல்வர், தமது 14 ஆம் வயதில், பலவான்குடி மணிவாசகர் சங்க ஆண்டுவிழாவில் சொற்பொழிவு ஆற்றச் சென்றிருந்தார். விழா நிகழ்வதற்கு முன், தம் உறவினரின் இல்லத்தில். சொற்பொழிவுக்காகக் குறிப்பு எழுதிக் கொண்டிருந்தார். அப்போது அங்கு வந்த அவருடைய உறவினர், திட்டை இராமசாமி செட்டியார் (தஞ்சையை அடுத்த திட்டை என்னும் தலத்தில் கோயில் திருப்பணி செய்தவர்) '' என்ன எழுதுகிறாய் ?'' என்று வினவினார். இளம் பேச்சாளர், '' பேசுவதற்கு நோட்ஸ் எடுக்கிறேன் '' என்றார். '' நோட்ஸ் எல்லாம் கூடாது. எல்லாம் ரொக்கமாக இருக்க வேண்டும் '' என்று சட்டெனக் கூறினார் இராமசாமிச் செட்டியார். அன்று முதல் குறிப்பு எழுதி வைத்துக் கொள்ளாமலேயே பழகி, நிரல்படப் பேசுவதில் வல்லமை பெற்றார் நம் முத்துவிழாச் செல்வர்.

பாண்டிய மன்னன் தனது நாட்டிற்கு நற்குடி மக்கள் வேண்டும் என்று விரும்பிச் சோழநாட்டில் வாழ்ந்து வந்த நகரத்தார்களை அழைத்துக்கொண்டுவந்து, கடற்கரைக்கு மேற்கு, வையை ஆற்றிற்கு வடக்கு, பிரான்மலைக்குக் கிழக்கு, வெள்ளாற்றிற்குத் தெற்கு ஆகிய நான்கு எல்லைகட்கு உட்பட்ட ஊர்களில் குடியேற்றியதுடன் அவர்கள் வேண்டு கோளுக்கு ஏற்ப, மிகப் பழைய ஒன்பது சிவாலயங்களைப் பரிபாலன உரிமையோடு அவர்களுக்கு அளித்தான். அத்திருக்கோயில்கள்,

1. இளையாற்றக்குடி,
2. மாற்றூர்,
3. வயிரவன் கோயில்,
4. இரணியூர்,
5. பிள்ளையார்பட்டி,
6. நேமம்,
7. இலுப்பைக்குடி,
8. சூரைக்குடி,
9. வேலன்குடி.

என்பவை ஆகும்.

இவற்றுள், இளையாற்றக்குடிக் கோயில்மரபினர், ஒக்கூர் உடையார், பட்டணசாமியார், பெருமருதூருடையார், கழனிவாசற்குடியார், கிண்கிணிக்கூருடையார், பேரசெந்தூருடையார், சிறுசேற்றூர் உடையார் என்னும் ஏழு பிரிவினராகவும்,

மாற்றூர்க் கோயில்மரபினர், உறையூர் உடையார், அரும்பாக்கூர் உடையார், மணலூர் உடையார், மண்ணூர் உடையார், கண்ணூர் உடையார், கருப்பூர் உடையார், குளத்தூர் உடையார் என்னும் ஏழு பிரிவினராகவும்,

வயிரவன் கோயில் மரபினர், சிறுகுளத்தூருடையார், கழனிவாசல் உடையார், மருதேந்திரபுரம் உடையார் என்னும் மூன்று பிரிவினராகவும் உள்ளனர்.

ஒன்பது கோயில்களின் சுவாமி, அம்மை திருப்பெயர்கள் வருமாறு :-

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | இளையாற்றக்குடி | : | கைலாசநாதர், | நித்திய கல்யாணி |
| 2. | மாற்றூர் | : | ஐந்நூற்றீசர், | பெரியநாயகி |
| 3. | வயிரவன் கோயில் | : | வளரொளி நாதர், | வடிவுடை அம்மை |
| 4. | இரணியூர் | : | ஆட்கொண்ட நாதர், | சிவபுரந்தேவி; |
| 5. | பிள்ளையார்பட்டி | : | கற்பக விநாயகர்; | |
| | | | திருவீசர், | சிவகாமவல்லி, |
| | | | மருதீசர், | வாடாமலர் மங்கை |
| 6. | நேமம் | : | செயங்கொண்டசோழேசர், | சௌந்தர நாயகி |
| 7. | இலுப்பைக்குடி | : | தான்தோன்றியீசர், | சௌந்தரநாயகி |
| 8. | சூரைக்குடி | : | தேசிகநாதர், | ஆவுடைநாயகி |
| 9. | வேலன்குடி | : | கண்டீசர், | காமாட்சி |

பிள்ளையார்பட்டிக் கோயிலில் ஆவணித்திங்களில் விநாயக சதுர்த்தித் திருவிழா 10 நாட்களும், இலுப்பைக்குடிக் கோயிலில் சித்திரைத் திங்களில் பிரும்மோத்சவம், தெப்பத் திருவிழாவுடன் 10 நாட்களும் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன,

இளையாற்றக்குடிக் கோயில் மரபினர்,

'' கல்வாச நாட்டில் இளையாற்றக்குடியான
குலசேகரபுரத்தில்..............................உடையார் '' என்றும்

மாற்றூர்க் கோயில் மரபினர்,

'' கேரளசிங்க வளநாடாகிய பிரம்பூர் நாட்டில்
மாற்றூரான வீரபாண்டிய புரத்தில்..............உடையார் '' என்றும்

வயிரவன்கோயில் மரபினர்,

'' கேரளசிங்க வளநாடாகிய ஏழகப் பெருந்தெருவான
வீரபாண்டிய புரத்தில்......................உடையார் '' என்றும்

இரணியூர்க் கோயில் மரபினர்,

'' கல்வாச நாட்டில் இளையாற்றக்குடியான
குலசேகரபுரத்தில் இரணியூர் மருதங்குடியான
இராசநாராயணபுரத்தில் இரணியூர்த் திருவேட்பூர்
உடையார் '' என்றும்

பிள்ளையார் பட்டிக் கோயில் மரபினர்,

'' கல்வாச நாட்டில் இளையாற்றக் குடியான
குலசேகர புரத்தில் இரணியூர் மருதங்குடியான
இராசநாராயண புரத்தில், பிள்ளையார் பட்டியான
திருவேட்பூர் உடையார் '' என்றும்

நேமங்கோயில் மரபினர்.

'' கேரளசிங்க வளநாட்டில் நேமமாகிய குலசேகரபுரத்தில்
தேனாறு பாயும் இளநலமுடையார் '' என்றும்

இலுப்பைக்குடிக் கோயில் மரபினர்,

'' கேரளசிங்க வளநாடாகிய பிரம்பூர் நாட்டில்,
இலுப்பைக் குடியான புகழிடம் கொடுத்த பட்டினத்தில்
சூடாமணி புரம் உடையார் '' என்றும்

சூரைக்குடி கோயில் மரபினர்,

'' கேரளசிங்க வளநாட்டில் சூரைக்குடியான தேசிகநாராயணபுரத்தில்
புகழ்வேண்டிய பாக்கம் உடையார் '' என்றும்

வேலன்குடிக் கோயில் மரபினர்,

'' கேரளசிங்க வளநாடாகிய பாலையூர் நாட்டில் வேலன்குடியான
தேசிகநாராயணபுரத்தில், கழனிநல்லூர் உடையார் '' என்றும்

திருமணமுறி முதலிய ஆவணங்களில் குறிக்கப் பெறுகின்றனர்.

ஒன்பது கோயில் நகரத்தார்களும் அவரவர்களுக்கு உரிய கோயில்களில் பாக்கு வைத்து, சுவாமிக்குச் சாத்திய மாலை விபூதிப் பிரசாதம் பெற்றே தம் வீட்டுத் திருமணங் களை நடத்தி வருகிறார்கள். அரசினர் வைத்துள்ள பதிவு முறையைவிட இது சிறந்ததாக அமைந்துள்ளது.

பாரத நாட்டில் பல்வேறு சமூகத்தினர்களாக வாழும் மக்கள், தத்தம் குடிகளை மூலபுருடர்களின் பெயர்களால் அமைந்த கோத்திர முறையில் கொண்டிருக்கின்றார்கள். நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் மட்டுமே யாவருக்கும் குடி முதல்வராகிய சிவபரம் பொருளைத் தம் குடிமுதல்வராகக் கொண்டு, தம்மைச் சிவகோத்திரத்தார் என்று குறித்து• மேற்கூறிய ஒன்பது கோயில்களின் மூலத்தானச் சிவலிங்க மூர்த்திகளால் தம் குடிப்பிரிவு களை விளங்கச் செய்து வாழ்ந்து வருகிறார்கள்.



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்



# முத்துவிழா நாயகரின் ஞானசிரியர்

'' சிவநெறித்தொண்டர் ''

**இரா. சரவணபவானந்தன்** B.Com.,

இக்கட்டுரை ஆசிரியர் இளமையில் முறையாகப் படித்து வணிகவியல் தேர்வு பெற்றவர், அறச்செயல்கள் செய்வதில் பெரிதும் பொருட் செலவு செய்த பரம்பரையில் வந்தவர். இளமை முதலே சிவநெறி ஈடுபாடும் சிவத்தொண்டு செய்வதில் ஆர்வமும் கொண்டவர், நம் கழகத்தின் செயலாளராக சென்ற ஆறு ஆண்டுகளாக முறையாகத் தொண்டு புரிந்து வருபவர். சமய விசேட நிர்வாண தீட்சைகளும் சாதகாபிஷேகமும் பெற்று முறையாக சிவபூசை முதலியவற்றை செய்து வருபவர். அதனோடு தமது மனைவி மக்கள் ஆகியவர்களையும் சிவதீட்சை பெறச்செய்து சிவநெறியில் ஒழுகிவரச்செய்தவர். இதில் தமக்கு நேரே தெரிந்த செய்திகளையும், முத்துவிழா நாயகர் முதலானோர்பால் கேட்டறிந்த செய்திகளையும் கட்டுரை ஆசிரியர் குறிப்பிட்டிருக்கிறார்.

— பதிப்பாசிரியர்

சித்தாந்த சைவச் செந்நெறிக்கு முதல் ஆசிரியராக விளங்குபவர் கல்லாலின் புடை அமர்ந்த தென்முகக் கடவுள் ஆவார். அவரை, '' பரகுரு '', என்று சைவ மரபு போற்றும். அவரிடம் உபதேசம் பெற்ற முதல் ஆசிரியர் திரு நந்திதேவர். அவர்பால் சனற்குமார மகாமுனிவரும், அவர்பால் சத்திய ஞான தரிசினிகளும், அவர்பால் பரஞ்சோதி மகாமுனிவரும் வழிவழியாக ஞான உபதேசம் பெற்றவர்கள். திருநந்திதேவர் முதல் பரஞ்சோதி முனிவர்வரை உள்ள நால்வரும் திருக்கயிலாய வாழ்க்கையை உடையவர்கள். இவர்கள் நால்வரையும் '' அகச் சந்தானக்குரவர்கள் '', என்று சைவமரபு போற்றும், இவர்களில் சனற்குமார முனிவரிடம் அருள் உபதேசம் பெற்ற நான்கு குருமூர்த்திகள்

நில உலகத்தில் மடாலயங்களை நிறுவி சைவ குரு பாரம்பரியத்தை நிலைநாட்டினார்கள். அவர்கள் பரம்பரையில் வந்த ஆசாரியர்கள் ஆதிசைவ மரபில் தொடர்ந்துவந்து சீடர் களுக்கு அனுக்கிரகம் செய்து வருகிறார்கள்.

திருநந்தி தேவரிடம் அருள் உபதேசம் பெற்றவர்களில் திருமந்திரமாலையை அருளிச் செய்தவர் திருமூலதேவரும் ஒருவர். அவர்தமது திருமந்திரத்தில் தென்முகக் கடவுளிடம் திருநந்தி தேவரும் அவரிடத்தில் சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் ஆகிய நால்வரும் சிவயோக முனிவரும், தில்லை அம்பலத்தை தொழுது கொண்டிருக்கின்ற பதஞ்சலி முனிவரும் வியாக்ரபாத முனிவரும் தாமும் உபதேசம் பெற்றுக் கொண்டதாகவும் தம்மிடம் உபதேசம் பெற்றவர்கள் எண்மர் என்று கூறுகிறார்.

இங்ஙனம் சனற்குமார பரம்பரையில் ஆதி சைவ மரபில் தமிழ்நாட்டில் தோன்றிய குருபரம்பரையில் நாம் செய்த தவப்பயனால், நமக்கு அருள்புரிய சிவஸ்ரீ ஈசான சிவாசாரிய சுவாமிகள் தோன்றினார்கள். ஆகவே தென்முகக் கடவுள் வழிவந்த குருபரம்பரை திருக் கயிலாய பரம்பரை என்று சைவ உலகத்தில் போற்றப்பெறும்.

சிவஸ்ரீ சுவாமிகள் 16—6—1900-ல் ஆனித் திருவோண நாளில், முன்னர் திருக் கடவூரில் வாழ்ந்து, பின்னர் சென்னிமலைக்கு வந்த சிவசுப்ரமணிய குருக்களின் தவப்புதல் வராகத் தோன்றினார்கள். இவர்களுக்கு பெற்றோர்கள் வைத்த பிள்ளைத் திருநாமம் சுப்ரமணியம் என்பதும் தீட்சை திருநாமமே ஈசான சிவம் என்பதும் நினைவில் இருத்த வேண்டியவை. தனது தந்தையாரிடமும், காவேரி சுப்ரமணிய குருக்களிடமும் வடமொழி, தமிழ்மொழி, நூல்களைக் கற்று யாழ்ப்பாணம் கதிரைவேல் பிள்ளை அவர்களிடம் சமயக்கருவி நூல்களை முறையாகப் பயின்றார்கள். இவர்களது தாயார் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளின் அன்னையராகிய இசைஞானியார் வம்ச பரம்பரையில் தோன்றியவர்கள். ஸ்ரீ ஆறுமுகநாவ லர் அவர்களின் நேர் மாணவராய் அவர்களுடன் பல நாட்கள் உடன்பழகி, அவர்களின் சமயத் தொண்டிற்கு உறுதுணையாய் இருந்தவர்களும், தேவகோட்டை சத்திரம் சோமசுந்தரம் செட்டியார் அவர்களுக்கு இளமையில் ஆசிரியராய் இருந்து பின்னர் அவர்களது நல்லாதர வுடன் திருப்பரங்குன்றத்தில் சிவஞான போத அச்சு இயந்திர சாலையை ஸ்தாபித்து, அதன்மூலம் நீலகண்ட பாடியம், சிவஞானபோத வசனாலங்காரதீபம், சைவ வேதாந்தம் முதலிய பலநூல்களை வெளியிட்ட ஸ்ரீகாசிவாசி செந்திநாத ஐயர் அவர்களிடம் பயின்று, அவர்களது வெளியீடுகளுக்கு உதவி செய்தவர்கள். அப்போது இவர்களுடன் இன்னும் அறுவரும் உடன் இருந்து உதவி செய்தார்கள். என்றும் இவர்கள் எழுவரையும் ''சப்த ரிஷிகள்'' என்றும் சொல்லக்கேட்டிருக்கிறோம். நாவலர் அவர்களின் வாழ்க்கை வரலாறு பலரால் எழுதப் பெற்றுள்ளது. அவற்றில் வெளிவராத சில குறிப்புக்களை செந்திநாதஐயர் அவர்களிடம் நேரில் கேட்டறிந்து நம் சிவாச்சாரிய சுவாமிகள் பல சந்தர்ப்பங்களில் சொல்லுவார்கள்.

தேவகோட்டையில் 1916-ஆம் ஆண்டில் சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கம் என்று ஒரு சங்கத்தை அப்போது பெருஞ்செல்வர்களாகவும் சித்தாந்த சைவநெறியில் அழுத்தம் உடையவர்களாகவும் இருந்த சத்திரம் சோமசுந்தரம் செட்டியார் பெரிய மைனர் இராம நாதன் செட்டியார், திருப்புனவாயில் சுப்ரமணியம் செட்டியார், ஜமீன்தார் அருணாசலம் செட்டியார், ஆகியோர்கள் சங்கத்தை நிறுவி அதன் மூலம் சிவாகம நூல்கள் பலவற்றை அச்சிட்டு வெளிப்படுத்தியும், திருக்கானப்பேர் காளீஸ்வர குருக்கள் தூத்துக்குடி, பொ. முத்தையா பிள்ளை ஆகியவர்களை ஆசிரியர்களாக நியமித்து மாணவர்களுக்கு இலவச மாக உண்டி உடையும் சைவ சாத்திரக் கல்வியும் வழங்கினார்கள், அந்த சாத்திர வகுப்பில் நமது சிவாச்சாரிய சுவாமிகள் தமது பன்னிரெண்டாவது வயதிலேயே சேர்ந்து முறையான வேதசிவாகமப் பயிற்சி, திருமுறை மெய்கண்ட நூற்பயிற்சி முதலியவற்றைப் பெற்றார்கள்.

